செய்தி—நிற்க-இருக்க—கோதைவடிவேல்-வெற்றிமாலையணிந்தகூரியவேலையேந்திய—நளற்கு-நளமஹாராஜனுக்கு—உற்ற-பொருந்திய—செய்தியனைத்தும்-செய்கையனைத்தையும்—கூறுவாம்-சொல்லுவாம்—(எ-று) மற்று-அசை-(கருத்து) நூலாசிரியர் தமயந்தி இவ்வாறிருக்கநளன்செய்தியைச்சொல்லுவோமென்றார்-எ-ம், (௯௭)

பிரிவுறுபடலம்-முற்றிற்று.





உ

# வேற்றுருவமைந்தபடலம்.

இப்படலத்தால்நளமஹாராஜனுக்குநாட்டிற்செல்லினும்பிறரறியா திருக்கும்படிவேற்றுருவமைந்தமை சொல்லப்படுகின்றது.

(கலிநிலைத்துறை)

கள்ளுயிர்க்குமென்மலர்க்குழற்காமர்பூங்கொடியை *
நள்ளிருட்பொழுதகன்றனனண்ணருங்கானிற் ... ... *
றள்ளுதற்கருந்துயரொடுபோதலுந்தழலு ............ *
மெள்ளழற்புகைக்கொழுந்தெழக்கண்டனனுரவோன் *

(இ-ள்) உரவோன்-நளமஹாராசன்—கள்ளுயிர்க்கும்-தேனைத்தருகின்ற—மென்மலர்-மெல்லியமலர்களையணிந்த—குழல்-கூந்தலையுடைய—காமர்-அழகுபொருந்திய—பூங்கொடியை-தமயந்தியை—நண்ணரும்-அடைதற்கரிய—கானில்-வனத்தில்—நள்ளிருட்பொழுது-நடுராத்திரியில்—அகன்றனன்-விட்டுப்பிரிந்தவனாய்—தள்ளுதற்கரும்-ஒழித்தற்கரிய—துயரொடும்-துன்பத்துடனே—போதலும்-செல்லுமளவில்—தழலும்-தகிக்காநின்ற—ஒள்ளழல்-ஒளிபொருந்தியதீயினது—புகைக்கொழுந்து-தூமக்கொழுந்து—எழ-எழும்பாநிற்க—கண்டனன்-அதைப்பார்த்தான்—(எ-று) (கருத்து) நளன் அக்கினிவளர்ந்தெழக்கண்டான்-எ-ம், (௧)

செஞ்சுடர்ச்சிகைகளைநவிற்றெருமரலெய்தி ......... *
நஞ்சுயிர்க்கும்வாளரவொன்றுநாமவேயிறைவ... ... *

தஞ்சநீயெனையளித்தியென்றுரைத்தலுந்தாழா... .. *
தஞ்சலஞ்சலென்றடைந்தனன்மடங்கலேறனையான்...*

(இ-ள்) செஞ்சுடர்ச்சிகை-அக்கினிச்சுவாலையானது — வளைசலின்-சுற்றிக்கொண்டமையால்—தெருமரலெய்தி - மனங்கலங்கி—நஞ்சுயிர்க்கும்- விஷத்தைத்தருகின்ற—வாளரவொன்று-ஒளிபொருந்திய ஒருகார்க்கோடகனென்னுநாகமானது — நாமமேல்-அச்சத்தைத்தருகின்றவேலையேந்திய—இறைவ-நளமஹாராஜனே —நீ-நீயே—தஞ்சம்-இரக்ஷகன்—எனை-என்னை— அளித்தி-காக்கவேண்டும்—என்றுரைத்தலும்-என்று சொல்லியவளவில் — தாழாது-தயங்காது—அஞ்சலஞ்சல்-பயப்படாதேபயப்படாதே —என்றடைந்தனன்-என்றுசொல்லியவனாய்—மடங்கலேறனையான்- நளமஹாராஜன்—அடைந்தனன்-அருகிலடைந்தான்—(எ-று) (கருத்து) பாம்பு தன்னைக்காப்பாற்றென்ன நளன்பயப்படாதே யென்றான், எ-ம்;()

கனைசெழுஞ்சுடர்க்கொழுங்கனல்படர்தலிற்கரிந்து *
பனைமறிந்தெனக்கிடந்ததோர்பாந்தளைநோக்க......*
வனைபொலங்கழற்குரிசிலோர்மறையவன்முனிவா ...*
னினைவினுந்தனிப்பெயர்ந்திடு நிலைமையொன்றிலனால்

(இ-ள்) கனை-சத்தியாநின்ற—செழுஞ்சுடர்-செழித்தசுவாலைகளையுடைய—கொழுங்கனல் - மிகுந்தகாட்டுத்தீயானது —படர்தலில்-சுற்றிக்கொள்வதினால்—கரிந்து-கருகி — பனை - பனைமரமானது—மறிந்தென-விழுந்துகிடந்ததுபோல—கிடந்தது-கிடந்தசாயை—ஓர்பாந்தளை- கார்க்கோடகனென்னும்)ஒருபாம்பினை —நோக்க-(நளமஹாராஜன்)பார்க்க—வனைபொலங்கழல் - கட்டப்பட்டபொன்னாற்செய்தவீரக்கழலையணிந்த—குரிசில்- நளமஹாராசனே—ஓர்மறையவன்-அநாகஸனென்னும்ஒருபிரமஇருஷியினது—முனிவால்-சாபத்தினால்—நினைவினும்- நினைப்பினாலும்— தனி-தனியாக—பெயர்ந்திடு நிலைமை-நடக்கலாமென்னும்நிச்சயத்தை--ஒன்றிலன்-அடைந்திலேன்—(எ-று) ஆல்-அசை- (கருத்து) பாம்பானதுநளனே அநாகசரிஷிசாபத்தால்நடைபெற்றிலேனென்றது -எ-ம்,(௩)

அழலினின்றெடுத்தையிரண்டடிப்புறத்தகற்றின் ...*
முழுவலன்பொடுநன்கிழைக்குவலெனமொழிந்து ...*
தழற்கட்பாம்புடல்சுருக்கலுந்தழலருள்வரத்தா......*
லெழுவிநீள்கரத்தாலெடுத்தழற்புறத்திட்டான் ... ...*

(இ-ள்) அழலினின்றெடுத்து- அக்கினியினின்றெடுத்து— ஐயிரண்டடிப்புறத்து-பத்தடிக்குப்புறத்தில் — அகற்றில்-நீக்கிவிடுவையானால்—முழுவலன்பொடு-நிறைந்தவலியஅன்புடனே--நன்கிழை

க்குவல்-உனக்குநன்மையைச்செய்வேன் — எனமொழிந்து - என்றுசொல்லி — தழற்கண்-அக்கினிபொருந்தியகண்களையுடைய — பாம்பு-கார்க்கோடகநாகமானது — உடல்சுருக்கலும்- உடம்பைச்சுருக்கிக்கொண்டவளவில் — (நளமஹாராசனானவன்) தழலருள்வரத்தால்-அக்கினிதேவன்கொடுத்தவரத்தினால் — எழுவில்- தாங்கயோன்ற — நீள்காத்தால்-நீண்டகரத்தினால் — எடுத்து-எடுத்து — அழற்புறத்து-தீயினுக்குவெளியில் — இட்டான்- விடுத்தான் — (எ-று) (கருத்து) நளன்பாம்பையெடுத்துத்தீக்கப்புறம்விடுத்தான் என்பதாம், (௪)

கதழெரிக்கணின்றகற்றலுங்கதிரொளிவிரிக்கு.........*
மதிர்பொலன்கழலரசர்கோன்மெய்யுறத்தீண்டி... ...*
முதிர்சினத்தவாளரவுதன்முன்னுருவெடுப்ப...... ...*
விதுகுலத்துயர்வேந்தனுய்வேற்றுருவமைந்தான் ...*

(இ-ள்) கதழெரிக்கணின்று-சொலிக்கின்றதீயினின்றும் — அகற்றலும்-நீக்கிவிட்டவளவில் — கதிரொளிவிரிக்கும் - கிரணவொளிவீசாநின்ற — அதிர்-சத்திக்கின்ற — பொலன்கழல் - பொன்னாற்செய்யப்பட்டவீரக்கழலையணிந்த — அரசர்கோன் - நளமஹாராசனது — மெய்-சரீரத்தில் — உற-பொருந்தும்படி — தீண்டி-கடித்து — முதிர்சினத்த-மிகுந்தகோபத்தையுடைய — வாளரவு - ஒளிபொருந்தியகார்க்கோடகநாகமானது — தன்-தன்னுடைய — முன்னுரு-பழையவுருவத்தை — எடுப்ப-எடுக்க — விதுகுலத்து-சந்திரவம்சத்தில் — உயர்-உயர்ந்த — வேந்தனும் - நளமஹாராசனும் — வேற்றுருவமைந்தான்-வேற்றுருவடைந்தான் — (எ-று) (கருத்து) பாம்புகடித்தநளன்வேற்றுருவானான் என்பதாம், (௫)

கருணைசெய்தெனைப்புரந்தனிற்கடித்ததுமுன்னை ...*
யுருவுகண்ணுறிலொன்னலர்செகுப்பரென்பதனாற் ...*
பொருவிலோயினிவாகுவனெனும்பெயர்புனையா ...*
விருதுபன்னன்வாழயோத்திமாநகரினைகுதியால் ...*

(இ-ள்) கருணைசெய்து-கிருபைசெய்து — எனை-என்னை — புறந்த-இரக்ஷித்த — திற்கடித்தது-உன்னைக்கடித்தது — (ஏனெனில்) முன்னையுருவு-பழையவுருவமானது — கண்ணுறில் - காணப்படுமானால் — ஒன்னலர்-சத்துருக்கள் — செகுப்பர்-கொல்லுவார்கள் — என்பதனால்- என்னுநினைவினால் — பொருவிலோய் - ஒப்பற்றநளமஹாராசனே — இனி, இனிமேல் — வாகுவனெனும்-வாகுவனென்றுசொல்லப்பட்ட — பெயர்புனையா-பெயரைத் தரித்துக்கொண்டு — இருதுபன்னன்-இருதுபன்னமஹாராசன் — வாழ்- அரசாட்சிசெய்யாநின்ற — அயோத்திமாநகரில்-அயோத்தியெனப்பட்ட பெருமைபொருந்தியபட்டிணத்தில் — ஏகுதி - போவாயாக — (எ-று) ஆல்-அசை-

(கருத்து) பாம்புநளனை அயோத்தியில் இருதுபன்னனிடத்திற் போகும்படிசொல்லிற்று என்பதாம். (௬)

ஏந்தலேகியமன்னவன்சூதனாவியைந்து ..............*
கூந்தன்மாவுளந்தெரிதருவிஞ்சைநீகொடுப்பி ... ...*
ஆய்ந்தசூதுவெல்விஞ்சைநின்பாலவனளிக்குஞ்... ...*
சாந்தமென்முலைத்தமயந்திதன்னொடுஞ்சார்வாய்......*

(இ-ள்) ஏந்தல்-நளமஹாராசனே—ஏகி - அந்நகரத்திற்சென்று—அம்மன்னவன்-அந்த இருதுபன்னனுக்கு — சூதனாய்-தேர்ப்பாகனாக—இயைந்து-பொருந்தி—கூர்தல் புறமயிரினையுடைய — மா-குதிரைகளினது—உளம்-மனதை — தெரிதரும்-அறிகிற—விஞ்சை-வித்தையை—நீகொடுப்பின்- நீ (அவ்வரசனுக்கு) உபதேசிப்பையானால்—ஆய்ந்த-பரிசோதிக்கப்பட்ட--சூது-சூதினில்--வெல்-வெற்றியைத்தாநின்ற—விஞ்சை-வித்தையை — நின்பால்-உன்னிடத்தில்—அவன்-அவ்வரசன்—அளிக்கும்-கொடுப்பான் — (அதன்பிறகு)சாந்தம்-சந்தனக்கோலமணிந்த— மென்முலை-மிருதுவாகிய ஸ்தனங்களையுடைய— தமயந்திதன்னொடும் - தமயந்தியோடும்—சார்வாய்-கூடுவாய்—(எ-று) (கருத்து,பாம்பு நளனேகுதிரைகளின் மனமறியும்வித்தையை நீஇருது பன்னனுக்குக் கொடுத்தால்அவன் சூதுவெல்வித்தையையுனக்குக்கொடுப்பான்என்றது என்பதாம். (௭)

பின்னர்மன்னநின்பெருநிலக்கிழமையும்பெறுதி ...*
முன்னைமாணுருவெளிதினிற்பெற்றிடமுன்னி. ......*
லின்னபூந்துகில்புனைதியென்றிருதுகிலளித்துத்......*
தன்னுருக்கொடுபோயதுதழல்விழிப்பாந்தள் ... ...*

(இ-ள்) பின்னர்-பின்பு—மன்ன - நளமஹாராஜனே — நின்-உன்னுடைய—பெருநிலக்கிழமையும் - அரசாட்சியையும் --பெறுதி-அடைவாய்—முன்னை-முற்பட்ட—மாணுரு- மாட்சிமைபொருந்தியவுருவத்தை—எளிதினில்-வருத்தமின்றி—பெற்றிட முன்னில்-பெறநினைப்பையாகில்—(இன்னபூந்துகில்) இந்தஅழகிய வஸ்திரத்தை—புனைதியென்று-தரித்துக்கொள்ளென்றுசொல்லி—இருதுகில்-இரண்டுவஸ்திரங்களை— அளித்து-கொடுத்து —தன்னுருக்கொடு-தன்பழையவுருவத்தையெடுத்துக்கொண்டு—தழல்விழி - அக்கினிபொருந்தியகண்களையுடைய — பாந்தள்-கார்க்கோடகநாகமானது—போயது-மறைந்துபோயது —(எ-று) (கருத்து) பாம்புநளனே, உன்வடிவு கொள்ளவேண்டில் இந்த வஸ்திரத்தைத்தரியென்று இரண்டுவஸ்திரங்கொடுத்துப்போயிற்று என்பதாம், (அ)

அதிர்பொலன்கழலரசர்கோனவ்வயினீங்கிப்... ... ...*
பிதிர்சுணங்கணிசெம்முலைப்பெய்வளைத்தடந்தோள் *
மதர்வைநோக்கிதன்வாணகையெனவுயிர்வருந்துங் ...*
கதிர்செய்நித்திலம்வரன்றெறிதிரைக்கடல்கண்டான் *

(இ-ள்) அதிர்-சத்தியாநின்ற — பொலன்கழல்-பொன்னாற்செய்த வீரக்கழலையணிந்த — அரசர்கோன்- நளமஹாராசனானவன் — அவ்வயினீங்கி-அவ்விடம்விட்டுப்புறப்பட்டு — பிதிர்-பிதிர்ந்த — சுணங்கணி-தேமலையணிந்த — செம்முலை - விருப்பத்தைச்செய்கின்ற ஸ்தனங்களையும் — பெய்வளை-வளையலையணிந்த — தடந்தோள்-பருத்ததோள்களையுமுடைய — மதர்வைநோக்கிதன்-தமயந்தியினது — வாணகையென-ஒளிபொருந்தியதந்தங்கள்போல — உயிர்-உயிரை — வருந்தும்-வருத்துகின்ற — கதிர்செய்-ஒளிவிடுகின்ற — நித்திலம்-முத்துக்களை — வரன்று-வாரிக்கொண்டு — எறி-வீசாநின்ற — திரை-அலைகள்பொருந்திய — கடல்-சமுத்திரத்தை — கண்டான்-(நளமஹாராசன்)பார்த்தான் — (எ-று) (கருத்து) நளன் சமுத்திரத்தைக்கண்டான் என்பதாம் (௬)

வஞ்சர்நெஞ்சினாழ்கழியினோர்மடநடையன்ன... ...*
அஞ்சிறைப்புறத்தாருயிர்ப்பெடையினையணைத்துக்...*
கஞ்சநாண்மலர்ச்சேக்கையிற்கண்படநோக்கி.........*
நெஞ்சமாழ்குறநெடிதுயிர்த்தயர்வொடுநின்றான் ...*

(இ-ள்) வஞ்சர்-வஞ்சகரது — நெஞ்சின்-மனம்போல — ஆழ்-ஆழ்ந்த — கழியினில்-கழிநிலத்தில் — ஓர்மடவன்னம்-ஒருஇளவன்னமானது — அம் அழகிய — சிறைப்புறத்து-சிறகின்புறத்திலே — ஆருயிர்-நிறைந்தவுயிரையொத்த — ப்பேடையினை-பெட்டையன்னத்தை — அணைத்து-தழுவிக்கொண்டு — கஞ்சம்-தாமரையினது — நாண்மலர்-புதியமலராகிய — சேக்கையில்-படுக்கையில் — கண்படல்-நித்திரைசெய்வதை — நோக்கி-பார்த்து — நெஞ்சம்-மனமானது — மாழ்குற-வருத்தமடைய — நெடிதுயிர்த்து-பெருமூச்சுவிட்டு — அயர்வொடும்-சோர்வுடனே — நின்றான் (நளமஹாராசன்) நின்றனன் — (எ-று)(கருத்து) நளன் அன்னம்புணர்தலைக்கண்டுசோர்வுடனின்றானென்பதாம், (௭)

சுடர்செய்முத்தமுநேமியப்புள்ளுமென்றுகிரு ......*
நெடிதுநோக்கிநன்னேரிழைமுறுவலுமுலையுப் ...... ...*
வடிவமைந்தமென்விரலுமீங்ஙகைத்தியவாற்றாற் ... ..*
கடலில்வீழ்ந்துயிர்துறந்தனவெனமனங்கலுழ்ந்தான் *

(இ-ள்) சுடர்செய்-ஒளிவிடுகின்ற—முத்தமும்- முத்துக்களையும்

—நேமியம்புள்ளும்-சக்கிரவாகபக்ஷிகளையும்— மென்-மிருதுவாகி ட—துகிரும்-பவளங்களையும்—நெடிது-நெடுங்காலம்—நோக்கி- பார்த்து—நம்-நம்முடைய—நேரிழை- தமயந்தியினது—மூரலும்-தந்தவரிசைகளும்—மூக்கும்-ஸ்தனங்களும்—வடிவமைந்த-அழகுபொருந்திய—மென்விரலும்- மெல்லியவிரல்களும்—ஈங்கு- இக்காழிநிலத்தில்—எய்தியவாற்றால்- பொருந்தியபடியால்—கடலில்-சமுத்திரத்தில்—வீழ்ந்து (தமயந்தியானவள்) விழுந்து—உயிர் துறந்தனள்-இறந்தாள்—என- என்றெண்ணி—மனஞ்சுழன்றான்- நளமஹாராஜன் மனங்கலங்கினான்—(எ-று) அக்காழிநிலத்தில் காணப்பட்ட முத்துமுதலிய உவமானவஸ்துக்களை உவமேயமாக மயங்கினமையால் மயக்கவணி (கருத்து) நளன் தமயந்தி அவயவங்களுக்கு உவமானப்பொருள்களைக் கடலிற்கண்டான் என்பதாம், (௰௪)

ஆவியன்னதோரணங்கினையரையிருணீத்த... ... ...*
பாவியேன்முகநோக்குறிற்பழிவருமென்றோ ... ... *
மேவுசேக்கையிற்குருகிளம்பேட்டினம்வெருவிச் ... *
சேவலோடகன்றேகுவதெனமனந்திகைத்தான்...... *

(இ-ள்) ஆவியன்ன-உயிரையொத்த—ஓரணங்கினை-ஒப்பற்றதமயந்தியை—அரையிருள்-அர்த்தராத்திரியில்—நீத்த- தனியாகவிட்டுத—பாவியேன்- பாவியாகியவென்னுடைய—முகம்- முகத்தை—நோக்குறில்-பார்த்தால்—பழிவரும்-பாவம்வரும்—என்றோ-என்று நினைத்தோ—மேவு-பொருந்திய—சேக்கையில்- படுக்கையிலுள்ள—குருகு-பறவைகளினுடைய—இளம்-இளமைதங்கிய—பேட்டினம்-பெட்டைகளினமானது—வெருவி-பயந்து—சேவலொடு-ஆண்பறவைகளோடும்—அகன்று- அவ்விடத்தைவிட்டுநீங்கி—ஏகுவது-போவது—என-என்று—மனந்திகைத்தான்-மயங்கினான்—(எ-று) பறவைகள் இயல்பாய்மனிதரைக்கண்டோடினும் அதற்கு நளன் தன்குற்றத்தை ஏதுவாக்கினனாக இது தற்குறிப்பணி (கருத்து) பறவைகள் நீங்குதலை நளன் கண்டுதன்குற்றத்தை யெண்ணினான்

நவ்விநோக்கிதனகைமதிமுகமெனச்சிறந்த...... ...*
தெய்வநான்மலர்ப்போதவிழ்ந்துகடிமிர்ந்து......*
கவ்வைவண்டினத்துளியருந்தென்றலங்கன்று ... *
தைவருந்தொறுமெய்பதைத்தாருயிர்தளர்ந்தான் ... *

(இ-ள்) நவ்வி-மான்போன்ற—நோக்கிதன்-கண்களையுடையதமயந்தியினது—நகை-பிரகாசியாநின்ற—மதி- சந்திரனையொத்த—முகமென- முகம்போல்—சிறந்த- சிறப்படைந்த—தெய்வம்-

தெய்வத்தன்மையுள்ள—நாண்மலர்- புதிதாகமலர்கின்ற—போது- புஷ்பத்தில்—அவிழ்-விரிந்த—பூந்துகள்- மகரந்தப்பொடிகளை—திமிர்ந்து-பூசிக்கொண்டு—நவ்வை- ஒலிபொருந்திய—வெண்டிரை-வெளிர்த்தசமுத்திரவலைகளினுடைய—துளி-திவலைகளை—எறி-வீசுகின்ற—தென்றலங்கன்று - இளந்தென்றலானது— தைவருந்தொறும்-மேல்வீசுந்தோறும்—மெய்-சரீரமானது—பதைத்து-துடித்த—ஆர்-நிறைந்த—உயிர்- உயிரானது—தளர்ந்தான்- தளரப்பெற்றான்—(எ-று) (கருத்து) நளன் தென்றல்வீசலால் தளர்ச்சியடைந்தான் என்பதாம், (௰௩)

இன்னதன்மையன்வைகலீனாந்துபோயிறப்பக்......*
கன்னல்வேலியங்கழனியிற்களிச்சுரும்பாற்றும் [புல்லி
பொன்னற்றாமரைப்பொகுட்டின்மேன் மடப்பெடை
யன்னங்கண்படுவெள்ளநீரயோத்திநாடடைந்தான்...*

(இ-ள்) இன்னதன்மையன்- இத்தன்மையனாகியநளமஹாராஜன்—வைகலீனாந்து-பத்துநாள்—போயிறப்ப- நீங்கிப்போக—கன்னல்வேலி-கருப்பம்வேலியிடப்பட்ட—அங்கழனியில்-அழகியவயல்களில்—களிச்சுரும்பு- களிப்பினையுடையவண்டுகள்—ஆற்றும்-சத்தியாநின்ற—பொன்னம்- பொன்போலழகிய—தாமரைப்பொகுட்டின்மேல்- தாமரைப்பூங்கொட்டையில்—மடப்பெடை- இளமைதங்கியபெட்டையன்னங்களை—புல்லி-தழுவிக்கொண்டு—அன்னம்-அன்னப்பறவைகள்—கண்படு நித்திரைசெய்கின்ற—வெள்ளநீர்-மிகுந்தநீர்வளமுள்ள—அயோத்திநாடு- அயோத்திநகரத்தை—அடைந்தான்-சேர்ந்தான்—(எ-று) (கருத்து) நளன் அயோத்தியைச் சார்ந்தான் என்பதாம். (௰௪)

இருதுபன்னனைக்காண்டலுமெத்தொழில்வல்லை... *
மருவநாமமென்கூறெனவாகுவனென்பே... ......*
ருருவவாம்பரித்தேரினிதூர்குவனும்ப.................*
ரருமருந்தெனவடுதொழில்புரிவனென்றறைந்தான்.. *

(இ-ள்) இருதுபன்னனை-இருதுபன்னவரசனை—காண்டலும்-நான்கண்டவளவில்—எத்தொழில்- எச்செய்கையில்—வல்லை- நீதிறமையுள்ளவன்—மருவும்-பொருந்திய—நாமமென்-உன்பெயரியாது—கூறென-சொல்லென்று இருதுபன்னன்கேட்க—வாகுவன்-வாகுவனென்பது—என்பேர்- எனதுபெயராம்—உருவ- நிறத்தையுடைய—வாம்-தாவாநின்ற—பரி- குதிரைகட்டிய—தேர்-இரதத்தை—இனிது-நன்றாக—ஊர்குவன்- நடத்துவேன்—அன்றியும்-உம்பர்- தேவர்களினது—அருமருந்தென- அரிய அமுதம்போல—

அடுதொழில் - சமரலை — புரிவன் - செய்வேன் — என்றறைந்தன
ன் - என்று நளமஹாராஜன் சொன்னான் — (எ-று) (கருத்து) நளன் இ
ருதுபன்னனைக் கண்டு தன்னைச் சாரதி என்றான் என்பதாம், (௰௫)

வேந்தனவ்வுரைகேட்டலும் வியன்மணி நெடுந்தேர் ..*
கூந்தன்மாவுளமறிந்தனை குறிப்பினூர்குதியே...... *
லாய்ந்த செம்பொனோராயிரம் வைகலு மளிப்ப ......*
லேய்ந்த வென்னிருபாகரோடிருத்தி யென்றிசைத்தான்*

(இ-ள்) வேந்தன் - இருதுபன்னராசன் — அவ்வுரை - அந்நளன்
சொல்லை — கேட்டலும் - கேட்டமாத்திரத்தில் — வியன் - பருத்த — ம
ணி - நவரத்தினங்கள் பதித்த — நெடும் - நீண்ட — தேர் - தேரிற்கட்டப்
பட்ட — கூந்தல் - புறமயிரினையுடைய — மா - குதிரையினது — உள
மறிந்தனன் - மனதையறிந்தவனாகி — குறிப்பின் - குறிப்பினால் — ஊ
ர்குதியேல் - நடத்துகிறவனானால் — ஆய்ந்த - குற்றமற்ற — செம்பொ
னோராயிரம் - ஓராயிரம்பொன் — வைகலும் - நாள்தோறும் — அளி
ப்பல் - கொடுப்பேன் — ஏந்தல் - வீரனே — என் - என்னுடைய — இரு
பாகரோடு - இரண்டு சாரதிகளோடுங்கூட — இருத்தி - இரு — என்றி
சைத்தான் - என்று சொன்னான் — (எ-று) பொன்னென்பது இருபது
சின்னபணத்திற்குத் தொகைப்பேர் இது சேர - சோழ பாண்டியன்
நாட்டுவழக்கு (கருத்து) இருதுபன்னன் நளனை நாளொன்றுக்கு ஆயி
ரம்பொன் சம்பளத்தில் வைத்தான் என்பதாம், (௰௬)

அன்னவாறு நேர்ந்தலங்குளைப் புரவிமான்றேர்க்கு ...*
மன்னனாகிய நிடதர்கோன் வைகலும் புலம்பித் ...... *
துன்னுகானிடை நீத்தவடுயரமீக்கூர ........ ......*
வென்னளாயினளோவென விரங்கிவெய்துயிர்ப்பான்*

(இ-ள்) அன்னவாறு - அப்படியே — நேர்ந்து - சம்மதித்து — அல
ங்கு - அசைகின்ற — உளை - புறமயிரினையுடைய — புரவிமான் - குதிரை
கட்டிய — தேர்க்கு - இரதங்கட்கு — மன்னனாகிய - அதிபனாகிய — நிட
தர்கோன் - நளமஹாராசனானவன் — வைகலும் - நாள்தோறும் — புல
ம்பி - மனமிரங்கி — துன்னுகானிடை - நெருங்கியகாட்டினில் — நீத்த
வள் - விடப்பட்ட தமயந்தியானவள் — துயரம் - துன்பம் — மீக்கூர -
அதிகரிக்க — என்னளாயினளோ - எத்தன்மையளானாளோ — என - எ
ன்று — இரங்கி - புலம்பி — வெய்து - கொடியதாக — உயிர்ப்பான் - பெ
ருமூச்சுவிடுவான் — (எ-று) (கருத்து) நளன் தமயந்தியை நினை
த்து விசனப்படுவான் என்பதாம். (௰௭)

உயிர்த்துமெய்தளர்ந்தருகிய வேந்தனையுளத்தி......*
லயிர்த்தொர்சாரதியுற்றதை யெவன்கொலென்றறைய*

வெயிற்கொடுங்கதிர்மறைந்தழிவெவ்வழற்கானிற்... *
பயிர்ப்பிற்கோதையைத்தீர்ந்தனன்பரிவிலனென்றான்

(இ-ள்) உயிர்த்து-பெருமூச்சுவிட்டு — மெய்தளர்ந்து-சரீரம்வாடி — உருகிய- மனமுருகிய — வேந்தனை- நளமஹாராசனை — உளத்தில்-மனத்தில் — அயிர்த்து- சந்தேகித்து — ஓர்சாரதி- சீவலனென்னுமொருதேர்ப்பாகனானவன் — உற்றதை- நாள்தோறும் அடைந்த துன்பத்தை — எவன்கொலென்றறைய-என்னவென்றுகேட்க — வெயில்-வெய்யிலைச்செய்கின்ற — கொடுங்கதிர்- சூரியன் — மறைந்தழி -அஸ்தமித்தபின்பு — வெவ்வழல்- கொடியஅழல்பொருந்திய — கானில் - காட்டினில் — பயிர்ப்பில் - பரிசுத்தையாகிய — கோதையை-பெண்ணை — பரிவிலன்-அன்பில்லாதநான் — தீர்ந்தனன்- விடுத்தேன் — என்றான்-என்றுநளன்சொன்னான் — (எ-று) (கருத்து) ஓர்சாரதி நளனை என்விசாரப்படுகிறாயென நளன் தன்மனைவியைக் காட்டில்விட்டேனென்றான் என்பதாம். (௰அ)

வேற்றுருவமைந்தபடலம் - முற்றிற்று.



உ

# வீமன்தேடவிட்டபடலம்.

இப்படலத்தால் வீமராசன்தமயந்திநளன் இருவரையும்தேடுதற்குஅதற்குரியோரைவிடுத்தல் சொல்லப்படுகின்றது,

(கலிநிலைத்துறை,)

இனையனாகியமன்னவனவ்வழியிருப்ப....... ...... *
வினைவருங்கழல்விதர்ப்பர்கோன்மறையவர்க்கூய்என் *
றனையதன்னொடுநளனையுந்தேடிநீர்தந்தா... ...... *
னினைவயானையுந்தருகுவலெனவவர்நேர்ந்தார்... ...*

(இ-ள்) இனையனாகிய-இத்தன்மையனாகிய — மன்னவன்-நளமஹாராசன் — அவ்வழி- அவ்வயோத்தியில் — இருப்ப- இருக்க — வினைவருங்கழல்-சிறந்தவீரக்கழலையணிந்த — விதர்ப்பர்கோன் - வீமராசன் — மறையவர்- பிராமணர்களை — கூய்- அழைத்து — என்றனையதன்னொடும்-எனதுபெண்ணாகிய தமயந்தியோடும் — நளனையும்- நளமஹாராசனையும் — தேடி- தேசங்களிற்றேடி — நீர்- நீவிர் — தந்தால்-கொடுப்பீராயின் — நினைவயானையும்- நீர் நினைத்தவையனைத்தையும்

—தருகுவன்-கொடுப்பேன்—என-என்றுசொல்லி —அவர்-அம்ம ஹையவர்கள்—நேர்ந்தார்-(அதற்குச்) சம்மதித்தார்(எ-று) (கருத்து) வீமன்தன்மகளையும் மரு மகனையுங்கண்டு பிடித்துக்கொடுத்தவர்களுக்குநினைத்தயாவையுங்கொடுப்பேனென்றான் என்பதாம். (க)

தரங்கவாரிதிசூழ்தருதகைமைசாலுலக...... ....... *
மொருங்குதேடியுங்காண்கிலருலப்பிலார்திரிய, வரங்கொ
ள்கேள்வியன்சுதேவனென்றுரைக்குமோர்மறையோன் *
கருங்கட்பேதையைச்சேதியன்மனையிற்கண்டான் *

(இ-ள்) தரங்கவாரிதி-அலைகளையுடைய சமுத்திரமானது —சூழ்தரு-சூழ்ந்த—தகைமைசால்-மேன்மைபொருந்திய — உலகம்-பூவுலகம்—ஒருங்கு-ஒருங்குபட—தேடியும்-தேடியும் — காண்கிலார்-காணாதவராய்—உலப்பிலர்-அளவற்றபேர்கள்—திரிய-திரியாநிற்க—வரங்கொள்-வரத்தைக்கொண்ட—கேள்வியன் (சாஸ்திரக்) கேள்வியையுடைய-சுதேவனென்றுரைக்கும்—சுதேவனென்றுசொல்லப்பட்ட—ஓர்மறையோன்-ஒருபிராமணன் —கருங்கட்பேதையை-கரிய கண்களையுடையதமயந்தியை—சேதியன்மனையின்- சேதிதேயத்தரசனாகியசுவாகுவின்வீட்டில் —கண்டான்- பார்த்தான்—(எ-று) (கருத்து)சுதேவனென்னும் ஓர்பிராமணன்தமயந்தியைச் சேதி தியரண்மனையிற் கண்டான் என்பதாம், (உ)

மாசுபூத்தொளிமழுங்குபுமன்னுறுமணியிற் ... ...*
றேசழிந்திடுதெரிவைதன்றிருமுகநோக்கி........ ...*
யேசலில்லிவட்கோவிவையெய்துமற்றென்னு ... ...*
வாசில்கேள்வியோன்கலுழ்ந்தனன்றுயர்க்கடலாழ்ந்தான்

(இ-ள்) மாசுபூத்து-அழுக்கடைந்து—ஒளிமழுங்குபு- ஒளிமழுங்கி—மன்னுறுமணியில்-சாணையிடாதமணிபோல— தேசழிந்திடும் -அழகழிந்த— தெரிவைதன்-தமயந்தியினது —திருமுகம்-அழகியமுகத்தை—நோக்கி-பார்த்து —ஏசலில்-பழிப்பில்லாத — இவட்கோ-இப்பெண்ணுக்கோ—இவையெய்தும் - இவ்வவத்தைகள்பொருந்தும்—என்னு-என்று— ஆசில் -குறைவற்ற— கேள்வியோன்-கேள்வியையுடையசுதேவன் —கலுழ்ந்தனன் - கலங்கினவனாகி— துயர்க்கடல்-துன்பக்கடலில்—ஆழ்ந்தான்-அழுந்தினன் — (எ-று) மற்று அசை-(கருத்து)சுதேவன் தமயந்தியைக்கண்டழுதான் -எ-ம், (ந)

அழுவதென்கொலென்றிழைவினவநின்றதை......*
முழுவலன்புடைத்தோழன்யான்மெய்த்தநின்றமருங் *

குழுவுநின்னிருகுரவருந்தீங்கிலரென்னத்..........[ள்
தொழுதுமைக்கணீர்முலைத்தடம்பெருகமெய்சோர்ந்தா

(இ-ள்) அழுவதென்கொல் - துன்பப்படுவதுஎன்னகாரணம்—என்று-என்றுசொல்லி—ஆயிழை-தமயந்தியானவள் — வினவ-கேட்க—நின்றனை-உன்றந்தைக்கு—முழுவலன்புடை - நிறைந்தஅன்புடைய—தோழன்-தோழமையுள்ளவன்— யான்-நான்—மொய்த்த-நெருங்கிய—நின்-உன்னுடைய—தமரும் - உறவினரும்—குழுவும்-கூட்டத்தவரும்—நின்- உன்னுடைய— இருகுரவரும்-தாய்தகப்பன்மாரிருவரும்—தீங்கிலர்-கேடிலராயுளர் — என்ன-என்றுசொல்ல—தொழுது-(அவனைத்)தொழுது— மைக்கணீர்- மைபொருந்தியகண்ணீர்—முலைத்தடம்-முலையினிடத்தில் — பெருக-ஒழுக—மெய்-உடம்பு—சோர்ந்தாள்-மெலிந்தாள்—(எ-று) (கருத்து) தமயந்திசுதேவனை ஏனழுகிறாயென சுதேவன் நான் உன்தகப்பனுடைய தோழனென்றான் தமயந்தியுமழுதாள் என்பதாம், (௪)

கந்தவார்குழற்காரிகையழுதல்கேட்டிவட்கு..........*
தந்தையாரெவற்குரியளித்தவிரியறனித்து..............*
வந்தவாறெவனிவளைநீயுணர்ந்ததெவ்வாறென்..........*
றந்தணாளனைவினவினள்சுவாகுவையளித்தாள்...........*

(இ-ள்) கந்தம்-வாசனைபொருந்திய— வார்-நீண்ட—குழல்-கூந்தலையுடைய—காரிகை-தமயந்தியானவள் — அழுதல்-துன்பப்படுதலை—கேட்டு-(சுநந்தையால்)கேள்விப்பட்டு— (வந்து இவட்கு-இப்பெண்ணினுக்கு—தந்தையார்- தகப்பன்யார் — இத்தவிரியல்-இப்பெண்ணானவள்—எவற்குரியள் - எவனுக்குமனையாள்—தனித்து வந்தவாறு-தனித்துவந்தகிரமம்— எவன்-யாது — இவளை-இப்பெண்ணை—நீயுணர்ந்தது- நீஅறிந்தது— எவ்வாறென்று- எப்படியென்று—அந்தணாளனை-சுதேவனை — சுவாகுவையளித்தாள்-சேதிதேயத்தரசனைப்பெற்றதாயானவள்—வினவினள்-கேட்டாள் —(எ-று) (கருத்து) சேதிபதிதாய், தமயந்தி அழுதலைக்கேட்டு இவட்குத்தகப்பனார்,கணவனார்,என்றுபிராமணனைக்கேட்டாளென்பதாம், (௫)

மாதுகேட்டியிம்மடவரல்விதர்ப்பர்கோன்புதல்வி...*
காதலையகனிடதர்கோன்காசினிமுழுதுஞ்..............*
சூதினாலிழந்திவளையுங்கானிடைத்துறந்தா..............*
னாதலாலிவட்டேடெனவிதர்ப்பர்கோனறைந்தான்... *

(இ-ள்) மாது-அரசனதுதாயே—கேட்டி-கேள்— இம்மடவரல்-இப்பெண்—விதர்ப்பர்கோன்-வீமராசனது— புதல்வி-குமாரத்தி

—காதல்-அன்பினையுடைய—நாயகன்-(இவட்குக்)கணவன்—நிடதர்கோன்-நளமஹாராசன்—(அவன்)காசினிமுழுதும்-பூமிமுழுவதும்—சூதினால்-சூதாட்டத்தால்—இழந்து-தோற்றுவிட்டு—இவளையும்-இந்ததமயந்தியையும்—கானிடை-காட்டினில—துறந்தான்-விடுத்தான்—ஆதலால்-ஆகையால்—இவள்-இவளை—தேடென-தேடுவீரென்று—விதர்ப்பர்கோன்-வீமராசன்—அறைந்தான்-உத்தரவுகொடுத்தான்—(எ-று) (கருத்து) பிராமணனே அரசே,இப்பெண் வீமராசன்மகள், இவள்கணவன் நளன்,அவன் சூதாட்டத்தால்நாடிழந்துமனைவியைக்காட்டில்விடுத்தான், இவளைத்தேடென வீமனுத்தரவுகொடுத்தான் என்பதாம், (௬)

தேண்டியெங்கணுங்கண்டிலன்றிருவைநின்மனையிற் *
காண்டல்செய்தனன்கன்னலிற் பழுத்தமென்மொழியா
ள்,மாண்டபேரெழில்வாணுதல்வயங்கியமறுவா....... *
லீண்டுணர்ந்தனன்யானெனமறையவனிசைத்தான் .. *

(இ-ள்) எங்கணும்-எவ்விடத்திலும்—தேண்டி-தேடி—திருவை-லக்ஷ்மியையொத்ததமயந்தியை—கண்டிலன்-காணாதவனாய்—நின்மனையில்-உன்மாளிகையில்—காண்டல் செய்தனன்-கண்டேன்—கன்னலில்-கரும்பினும்—பழுத்த-முதிர்ந்த—மென் மொழியாள்-இனியவசனத்தையுடையஇந்தமயந்தியினது—மாண்ட-மாட்சிமைப்பட்ட—பேரெழில்-மிகுந்தஅழகுதங்கிய—வாணுதல் ஒளிபொருந்தியநெற்றியில—வயங்கிய-விளங்கிய—மறுவால் -மச்சையினால்—ஈண்டு-இவ்விடத்தில்—யான்- நான்—உணர்ந்தனன்-(இன்னாளென்று) அறிந்தேன்—என-என்று—மறையவன்-சுதேவனானவன்—இசைத்தான்-சொன்னான்—(எ-று) (கருத்து) சுதேவன்தமயந்தியைநெற்றிமச்சையினாலறிந்தேனென்றான் என்பதாம் (௭)

அதுகிளத்தலு மணிநுதன்மாசினையகற்ற ......... ...*
கதிரெறித்தலிற்கண்வழுக்குற்றனகூச.......... ... ...*
மதிநுதற்புறத்திலங்கியமறுவினை நோக்கித்.......... ...*
ததைமலர்க்குழற்றமயந்தியிவளெனவுணர்ந்தாள் ...*

(இ-ள்) அது-அச்செய்தியை—கிளத்தலும்-சொன்னவளவில்—அணிநுதல்-அழகியநெற்றியிலுள்ள—மாசினை-அழுக்கை—அகற்ற-போக்க—கதிரெறித்தலில்-ஒளிவிடுகின்றமையால்—கண்-நேத்திரங்கள்—வழுக்குற்றன-சிதறினவைகளாகி—கூச-அஞ்ச—மதிநுதற்புறத்து-பிறைபோன்றநெற்றியினிடத்து—இலங்கிய-பிரகாசித்த—மறுவினை-மறுவை—நோக்கி-பார்த்து—இவள்-இப்பெண்—ததைமலர்க்குழல்-நெருங்கியமலர்களையணிந்த கூந்தலையுடைய—

தமயந்தி-தமயந்தியே—என-என்று—உணர்ந்தாள்-(அரசனன்னை) அறிந்தாள்—(எ-று) (கருத்து) அரசன்தாய் மறுவினாலேதமயந்தியென்றறிந்தாளென்பதாம், (அ)

வனைமலர்க்குழன் மங்கைநின்னன்னையும்யானும்... ...*
புனைகருங்கழற்சுதர்மன்றன்புதல்வியராமே... ...*,
மெனனுமன்னைதனிணைமலர்ச்சீரடியிறைஞ்சிக்... ...*
கனைகருங்கடல்கரைபுரண்டாலெனக்கலுழ்ந்தாள்... ...*

(இ-ள்) வனைமலர்க்குழல்-பூமாலையணிந்த கூந்தலையுடைய—மங்கை-தமயந்தியே—நின்னன்னையும்-உனதுதாயும்—யானும்-நானும்—புனை-தரிக்கப்பட்ட—கரும்-பெருமைதங்கிய—கழல்-வீரக்கழலையணிந்த—சுதர்மன்றன்-சுதர்மராசனுடைய—புதல்வியராமே-புத்திரிகளாமோம்—எனவும்-என்று (அரசனன்னை) சொன்னவளவில்—அன்னைதன்-அப்பெரியதாயினது—இணை-இணைந்த—மலர் தாமரைமலரையொத்த—சீரடி-சிற்றடிகளில்—இறைஞ்சி-நமஸ்கரித்து—கனை-சத்தியாநின்ற—கருங்கடல்-கறுத்தகடலானது—கரைபுரண்டாலென-கரைபுரண்டோடினாற்போல—கலுழ்ந்தாள்-(தமயந்தி) அழுதாள்—(எ-று) கருத்து சேதிபதிதாய் தமயந்தியேஉன்தாயும்நானும்சுதர்மன் புத்திரிகள் என்றழுதாள் எ-ம், (கூ)

இன்னளென்றனையுணர்வதன்முன்னமுமீன்ற ..... *
வன்னையாமெனவளித்தனையன்புமீதூர............... *
மன்னுமென்னுயிர்மக்களைக்காண்பதற்கெந்தை ... *
பொன்னகர்க்கெனைவிடுத்தியென்றின்னுரைபுகன்றாள்

(இ-ள்) எனை-என்னை—இன்னளென்று-இத்தன்மையளென்று—உணர்வதன்முன்னமும்-அறிவதற்குமுன்பும்— ஈன்ற-பெற்ற—அன்னையாமென-தாயாவளென்னும்படி — அன்புமீதூர- ஆசைமிக—அளித்தனை-இரக்ஷித்தாய்—மன்னும்- அவ்விடத்திற்பொருந்தியிருக்கிற— என்னுயிர்மக்களை- என்னுடைய உயிர்போன்றபிள்ளைகளை—காண்பதற்கு-பார்ப்பதற்கு—எந்தை-என்பிதாவினது—பொன்னகர்க்கு-அழகியகுண்டினபுரத்துக்கு— எனைவிடுத்தி- என்னையனுப்பு—என்று-என்று—இன்னுரை- இனியசொற்களை — புகன்றாள்-(தமயந்தி)சொன்னாள்—(எ-று)(கருத்து) என்னையின்னளென்றறியுமுன்னமே அன்னையைப்போலுங் காப்பாற்றினாய் என்மக்களைக்காணவேண்டும் என்பிதாவிடத்துக்கனுப்பு என்றாள்-என்பதாம்

உரைசெய்மாற்றமேயோர்ந்துள்ளுருகுறத்தழுவிக் *
கரைசெய்வேலையிற்கருந்தடங்கண்கணீருகுப்ப... ...*

எரிமணிப்பொலஞ்சிவிகையினிருள்கனிந்தொழுகும்
விரைசெய்கோதையைவிதர்ப்பர்கோனகர்வயின்விடுத்தாள்

(இ-ள்) உரைசெய்மாற்றம்-(தமயந்தி) சொல்லியவசனத்தை—ஓர்ந்து-அறிந்து—உள் உள்ளி—உயிர்-பிராணனை—உருகுற-உருகும்படி—தழுவி-அணைத்துக்கொண்டு—அலைசெய்-அலையைச்செய்யாநின்ற—வேலையில்-சமுத்திரம்போல—கருங்-கறுத்த—தடம்-விசாலமாகிய—கண்கள்-நேத்திரங்கள்—நீர்-நீரை—உகுப்ப-சொரிய—எரி-பிரகாசிக்கின்ற—மணி இரத்நங்கள் பதித்த—பொலஞ்சிவிகையில்-பொற்பல்லக்கின்மீது—இருள்கனிந்து-இருண்டிருந்து—ஒழுகும்-ஒழுகாநின்ற—விரைசெய்-வாசனைபொருந்திய—கோதையை-அளகபாரத்தையுடையதமயந்தியை—விதர்ப்பர்கோன்-வீமராசனது—நகர்வயின்-குண்டினபுரத்தில்—விடுத்தாள்-அனுப்பினாள்—(எ-று) (கருத்து) பெரியதாயானவள் தமயந்தியைமுத்துச்சவிகையிலேற்றிக்குண்டினபுரத்துக்குஅனுப்பினாள், (௰௧)

கொள்ளைவண்டினங்கூட்டுணுநறுமலர்க்கோதை ...*
அள்ளலங்கருஞ்சேற்றிடையரக்கிதழ்விரிந்த........*
வள்ளவாய்ச்செழுங்கமலமேன்மடவனந்துயில்கூர் *
வெள்ளநீர்வயல்விதர்ப்பர்கோனகரமேயினளால் ...*

(இ-ள்) கொள்ளை-மிகுந்த—வண்டினம்-வண்டுக்கூட்டங்கள்—கூட்டுணும்-(தேனைக்) கொள்ளையிடும்படியாகிய—நறுமலர்-வாசனைபொருந்தியமலர்களையணிந்த—கோதை-கூந்தலையுடையதமயந்தியானவள்—அள்ளல்-குழைந்த—அம்-அழகிய—கரு-கரிய—சேற்றிடை-சேற்றிலுண்டாகிய—அரக்கிதழ்-செவ்விதழ்கள்—விரிந்த-மலர்ந்த—வள்ளவாய்-கிண்ணம்போன்றவாயையுடைய—செழும்-செழித்த—கமலமேல்-தாமரைமலரின்மேல்—மடவனப்-இளவன்னங்கள்—துயில்கூர்-நித்திரைசெய்கின்ற—வெள்ளநீர்-நீர்ப்பெருக்கையுடைய—வயல்-கழனிகளையுடைய—விதர்ப்பர்கோன்-விதர்ப்பதேயத்தரசனாகியவீமராசனது—நகரம்-குண்டினபுரத்தை—மேயினள்-அடைந்தாள்—(எ-று) (கருத்து) தமயந்திகுண்டினபுரத்தைச்சார்ந்தாள் என்பதாம், (௰௨)

அழுசவுண்கணுமற்றமெல்லாடையுமலங்கற்..........*
கழுமச்சுருட்டுபுகைசெயாக்கருங்குழற்காயும்.. ......*
வீழியிருக்கனும்விதர்ப்பர்கோன்வெய்துயிர்த்தயர்ந்
தாள்-நவியன்னையருறுதுயர்சாற்றலாந்தகைத்தே-*

(இ-ள்) அழுத-அழுகையுற்ற—உண்கணும்-தமயந்தியினதுமை

யுண்டகண்களையும்—அற்ற-அறுபட்ட—மெல்லாடையும் - மென்மைபொருந்தியவுடைவையும்—அலங்கல்-மலர்மாலைகளை—கழும்-நிறைய—சூட்டு-சூட்டி—கைசெயா-முடிக்காத—கருங்குழற்காடும்- கரியகூந்தற்காட்டையும் — விதர்ப்பர்கோன் - வீமராசனுனவன்—விழியிணைக்கலும் - கண்களாற்கண்டமாத்திரத்தில்—வெய்துயிர்த்து- பெருமூச்சுவிட்டு—அயர்ந்தான்- சோர்ந்தான்—அன்னையர்-தாய்மார்கள்—தழுவி- தமயந்தியைத்தழுவிக்கொண்டு—உறுதுயர் -அடைந்ததுன்பமானது—சாற்றலாம் - நம்மாற்சொல்லும்படியான—தகைத்தே-தன்மையையுடையதா— (எ-று) (கருத்து) தமயந்தியைவீமராசன்கண்டுசோர்ந்தான் தாய்மார்கள்தழுவிஅழுதார்கள் என்பதாம், (௰௩)

காட்டினள்ளிருட்காலையிற்காவலனீத்த……… ……*
ஈட்டொணாவெழிற்றெரிவையைத் தேடினன்கொணர்ந்
த-மூட்டுமுத்தழன் முறைமையின்வளர்த்திடுசுவேதன் *
வேட்டயாவையுங்கொள்கெனவளித்தனன் வீமன்…*

(இ-ள்) காட்டில் - வனத்தில்—நள்ளிருட்காலையில்- நடுராத்திரிகாலத்தில்—காவலன்- நளமஹாராஜன்—நீத்த-விட்ட—ஈட்டொணா-எழுதக்கூடாத—எழில்- அழகுபொருந்திய—தெரிவையை- தமயந்தியை—தேடினன் - தேடி—கொணர்ந்த-கொண்டுவந்த— மூட்டு-மூட்டப்பட்ட—முத்தழல்- மூன்றக்கினிகளை—முறைமையில- கிரமத்தினால்—வளர்த்திடும்-வளர்க்கநின்ற—சுவேதன்- சுவேதனென்னும்மறையவன்—வேட்ட-விரும்பிய—யாவையும்-எல்லாவற்றையும்—கொள்கென-பெற்றுக்கொள்ளென்று—வீமன்-வீமராசன்—அளித்தனன் -கொடுத்தான்—(எ-று) முத்தழலாவன-தக்ஷிணாக்கினி-காருகபத்தியம்-ஆஹவனீயம்- என்பதாம், (கருத்து) வீமராசன்சுவேதனுக்குவேண்டியனகொடுத்தான்-எ-ம், (௰௪)

மக்கள்வாண்முகநோக்கியமடவரனெஞ்ச…… …*
நெக்குவாடுதல்கண்டநற்றாயுளநெகிழ்ந்து…… …*
கக்குசெந்தழற்காலவேற்க தலற்குறுகி………*
நக்கபூங்கழனளனையுநாடுகென்றுரைத்தாள்… … …*

(இ-ள்) மக்கள்-பிள்ளைகளினது—வாண்முகம்- ஒளிபொருந்திய முகத்தை—நோக்கியும்-பார்த்தபின்பும்—மடவரல்- தமயந்தியினது—நெஞ்சம்-மனமானது—நெக்குவாடுதல் - நெகிழ்ந்துவாடுதலை—கண்ட-பார்த்த—நற்றாய்-நன்றதாயானவள்—உளநெகிழ்ந்து-மனமுருகி—கக்கு-கக்கப்பட்ட—செந்தழல்- சிவந்தஅக்கினிபொருந்திய—கால-இயமனையொத்த--வேல்-வேலாயுதத்தையேந்திய—

காதலன்-தன்னாயகனாகியவீமராசனை—குறுகி- கிட்டிநின்று—நக்
கபூங்கழல்-விளங்குகின்றஅழகியவீரக்கழலையணிந்த—நளனையும்-
நளமஹாராசனையும்—நாடுகென்று-தேடுகவென்று—உரைத்தாள்
சொல்லினாள்—எ-று (கருத்து) சாருகாசினிநளனையும்தேடும்படி
வீமனுக்குச்சொன்னாள்-எ-ம், (௰௫)

ஓடரிக் கண்ணாளுரைத்தலுமொற்றரைக்கூவி.......... ...*
யாடகப்பசும்பொலன்கழனளனைநீராய்ந்து........*
தேடிவம்மினென்றரசர்கோன்றிசைதொறுஞ்செலுத்த
நாடினாரவர்நளிகடல்வரைப்பெலாநடந்தே.........*

(இ-ள்) ஓடரிக்கணாள்-நீண்டஅரியபரந்தகண்களையுடையகாஞ்சனை
மாலையானவள்—உரைத்தலும்- சொன்னமாத்திரத்தில்—ஒற்றரை-
வேவுகாரரை—கூவி-அழைத்து—ஆடக-பொன்னாகிய—பசும்-
பசுமையாகிய—பொலன்-அழகிய—கழல்- வீரக்கழலையணிந்த—
நளனை- நளமஹாராஜனை—நீர்-நீங்கள்—ஆய்ந்து - ஆராய்ந்து—
தேடி-திரிந்துபார்த்து—வம்மின்-வாருங்கள்— என்று-என்றுசொ
ல்லி—அரசர்கோன்- வீமராசன்—திசைதொறும் - எட்டுதிக்கிலு
ம்—செலுத்த -அவர்களைஅனுப்ப—அவர்-அவ்வேவுகாரர்—நளி-
குளிர்ச்சிபொருந்திய—கடல்வரைப்பெலாம் - சமுத்திரஞ்சூழ்ந்தபூ
மண்டலமுழுமையும்—நடந்து-திரிந்து—தேடினார்-தேடினார்கள்
—(எ-று) (கருத்து) வீமராசன்நளனைத்தேடும்படிவேவுகாரர்களுக்
குக்கட்டளையிட்டான் என்பதாம், (௰௬)

ஒருவுமொற்றரிலொருவன்மீண்டணங்கின்முன்றோன்
றி-யரிவைமூதெயிலயோத்தியாநகரினிலடைந்தேன் *
புரிகருங்குழன்மனைவியைப்போக்கினன்புலம்பு ... *
மொருவனிவ்வழியுண்டுகொலெனவினாவினனால்.......*

(இ-ள்) ஒருவும்-தேடுகிற—ஒற்றரில்- வேவுகாரருள்—ஒருவன்-
பருணாதனென்னுமொருவேவுகாரன்—மீண்டு - திரும்பிவந்து—அ
ணங்கின்முன்-தமயந்தியின்முன்னிலையில்—தோன்றி- நின்று—அ
ரிவை-இராசகுமாரத்தியே—மூது-பழைய—எயில் -மதில்சூழ்ந்த
—அயோத்திமாநகரில் - அயோத்தியாபுரியில்—அடைந்தேன்-செ
ன்றேன்—புரி. விரும்பப்பட்ட—கருங்குழல்- கரியகூந்தலையுடை
ய—மனைவியை- மனையாட்டியை—போக்கினன் - விடுத்தவனாகி—
புலம்பும்-துன்பப்படுகின்ற—ஒருவன்-யாவனாயினுமொருவன்—
இவ்வழி-இந்தப்பட்டினத்தில்—உண்டுகொல்-உளனோ—என-என்று
—வினாவினன்-விசாரித்தேன்— (எ-று)ஆல்-அசை -(கருத்து) பரு
ணாதனென்னும் வேவுகாரன் தமயந்திமுன்வந்து அயோத்தியில்ம

னைவினைப நீக்கினவனுண்டா வெனக்கேட்டேன். இதுமுதல்மூன்று பாடலுங்குளகம், (௰௭)

ஓகையோடெனக்கொருவனாங்குளங்கனிந்துருகி ... *
வாகைவெஞ்சிலையிருதுபன்னற்குயர்மான்றேர்ப் ... *
பாகன்கொய்யுளைப்பரியுளந்தேர்பவனொருவன் ... *
றோகையைப்பிரிந்தாருநுழப்பவன்சோர்வான் ... *

(இ-ள்) ஓகையோடு-அன்புடனே—எனக்கு-எனக்கே—ஒருவன்-ஒருமனிதன்—ஆங்கு-அவ்வயோத்திநகரில்—உளங்கனிந்து-மனங்கனிந்து—உருகி-கரைந்து—வாகை-வெற்றிமாலையணிந்த—வெஞ்சிலை-வெவ்வியவில்லையேந்திய—இருதுபன்னற்கு-இருதுபன்னவரசனுக்கு—உயர்மான்றேர்-உயர்ந்தகுதிரைகட்டியதேரை நடத்துகின்ற—பாகன்-சாரதியும்—கொய்யுளை-கொய்துகட்டியபுறமயிரினையுடைய—பரி-குதிரைகளினது—உளம்-மனதை—தேர்பவன்-அறிபவனும்—ஒருவன்-தனித்தவனும்—தோகையை-மனையாளை—பிரிந்து-பிரிவுற்று—ஆருநுழப்பவன்—மிகுந்த-துன்பப்படுகின்றவனும்—சோர்வான்-சோர்வையடைகின்றவனும் — (எ-று) (கருத்து) அங்கொருவன் இருதுபன்னனுக்குத்தேர்ப்பாகன்மனைவியைப்பிரிந்துசோர்பவன் என்பதாம் (௰௮)

அழலிலாதுணவமிர்தெனவடுந்தொழில்புரிவோன் . *
மழகளிற்றினன்னடையினன்வாகுவனென்போ......*
னெழுவுலாந்திணிதோளினனீங்குளனென்ன.........*
வொழுகுபூங்கொடிமருங்குலாயுணர்ந்தனன்வந்தேன் *

(இ-ள்) அழலிலாது-நெருப்பில்லாமல்—உணவு-உண்டியை—அமிர்தென-அமுதமென்னும்படி—அடுந்தொழில்-சமைத்தலை—புரிவோன்-செய்வானும்—மழகளிற்றின-இளமைதங்கியயானைபோல—நன்னடையினன்-நல்லநடையையுடையவனும்—வாகுவனென்போன்-வாகுவனென்னும்பெயரையுடையவனும்—எழுவுலாம்-தூண்போலுலாவுகிற—திணி-வலிமைபொருந்திய—தோளினன்-தோள்களையுடையவனுமாய் ஒருவன்—ஈங்கு-இந்நகரத்தில்—உளன் இருக்கின்றான்—என்ன-என்றுசொல்ல—ஒழுகு-தொழுகுகின்ற—பூங்கொடி-புஷ்பக்கொடியையொத்த—மருங்குலாய்-இடையையுடையதமயந்தியே—உணர்ந்தனன்-இச்செய்தியறிந்தவனாகி—வந்தேன்-இவ்விடம்வந்தேன்என்றான் — (எ-று) (கருத்து) அக்கினியில்லாதுசமைப்பவன் இருக்கிறானென்று கேட்டுவந்தேன் என்றான் என்பதாம், (௰௯)

வீமன்தேடவிட்டபடலம்-முற்றிற்று,



உ

# கலிநீங்குபடலம்.



இப்படலத்தால் நளனிடத்திற்பொருந்தி வருந்தியிருந்தகலிய
ன் நளன் அக்ஷவித்தைபதிந்தபின்னவனிடத்தில் நில்லாது
விட்டு நீங்குதல் சொல்லப்படுகின்றது.

(கலிநிலைத்துறை.)

என்றுகூறியவந்தணற்கிருநிதிவழங்கி ........ *
நன்றுநின்னுரையின்னுமயோத்தியினண்ணி *
மன்றன்மாலைவேலிருதுபன்னற்குளமகிழ்வ ... *
தொன்றுகூறுவதுளதெனவுரைத்தனன்மெயினளால்

(இ-ள்) என்றுகூறிய-இப்படியென்றுசொல்லிய—அந்தணற்கு-ஒற்றனாய்ச்சென்றபருணாதனென்னும் பிராமணனுக்கு—இருநிதி-மிகுந்தநிதிகளை—வழங்கி-கொடுத்து—நின்னுரை-உன்சொற்கள்—நன்று-நல்லது—இன்னும்-மறுபடியும்—அயோத்தியினண்ணி-அயோத்திநகரத்திற்பொருந்தி—மன்றல் - வாசனைபொருந்திய—மாலை-பூமாலையணிந்த—வேல்- வேலாயுதமேந்திய—இருதுபன்னற்கு-இருதுபன்னமஹாராசனுக்கு—உளமகிழ்வது- மனங்களிப்பதாகிய—ஒன்றுகூறுவது-ஒன்றுசொல்லத்தக்கது—உளது- உண்டு—என-என்று—உரைத்தனன்-மெயினள்-சொல்லினாள்--(எ-று) கருத்து)தமயந்திபிராமணனுக்குப்பொருள்கொடுத்துஇருதுபன்னனுக்குச்சொல்லவேண்டுவதொன்றுண்டென்றுசொல்லத்தொடங்கினாள்,

நாட்டமூன்றுடைநாயகன்வரத்தினானங்கை... ...... *
மீட்டுங்கன்னிகையாயினள்சுயம்வரம்விழைந்தாள் ... *
கேட்டுமாநிலக்கிழவருமவ்வுழியிறத்தார்......... ... *
பூட்டுவார்சிலைமன்னநீம்பாதியேற்போவாய்... ...... *

(இ-ள்) நாட்டமூன்றுடை-திரிநேத்திரந்தரித்த—நாயகன்- பரமசிவனது—வரத்தினால்-அநுக்கிரகத்தினால்—நங்கை-தமயந்தியானவள்—மீட்டும்-மறுபடியும்—கன்னிகையாய்-கன்னிகாப்பெண்ணாகி—சுயம்வரம்-சுயவரத்தை—விழைந்தாள்-விரும்பினாள்—கேட்டு-அச்செய்திகேட்டு—மாநிலக்கிழவரும்-அரசர்களும்—அவ்வுழி-அவ்விடத்தில்—இறுத்தார்-வந்தடைந்தார்கள்—பூட்டு- நாணேறிட

பட்ட — வார்சிலை - நீண்ட வில்லையேந்திய — மன்ன - இருதுபன்னராசனே — நீபோதியேல் - நீபோவையானால் — போவாய் - (விரவித்) போவாய் — (எ-று) (கருத்து) இருதுபன்னனே தமயந்தி இரண்டாவது சுயம்வரத்தை யிச்சித்தாள் நீபோவையாகிற்போ-இதுமுதலிரண்டுங் குளகம்-எ-ம், (௨)

நாளைநன்மணம்புணர்வதுநிடதநாடளிக்குங் ... ... *
காளையாருயிருளன்கொலோகழிந்தனன்கொல்லோ ... *
ஆளிவொய்ம்பினாயென்றுநீயறைகெனவறைந்தாள் *
வாளைவென்றரிபரந்துமைதோய்ந்தகண்மடவாள் ... *

(இ-ள்) நாளை - நாளைத்தினத்தில் - நல் - நல்ல — மணம் - விவாகமானது — புணர்வது - செய்யப்படுவதாம் — நிடதநாடு - நிடததேயத்தை — அளிக்கும் - இரக்ஷிக்கின்ற — காளை - நளமஹாராசனானவன் — ஆர் - நிறைந்த — உயிர் - பிராணனானது — உளன்கொலோ - இருக்கப்பெற்றானோ — கழிந்தனன்கொல்லோ - நீங்கப்பெற்றானோ — ஆளி - சிங்கத்தையொத்த — வொய்ம்பினாய் - பலத்தையுடைய இருதுபன்னனே — என்று - என்றுசொல்லி — நீயறைகென - நீசொல்லென்று — வாளை - வாளாயுதத்தை — வென்று - சயித்து — அரிபரந்து - செவ்வரியபரந்து — மைதோய்ந்த - அஞ்சனம்பொருந்திய — கண் - கண்களையுடைய — மடவாள் - தமயந்தியானவள் — அறைந்தாள் - சொன்னாள் — (எ-று) (கருத்து) நாளைவிவாகமெனச்சொல்லென்றுசொன்னாள் (௩)

சுருதிநூற்றுறைபோயவன்றுனைவினிலெய்தி ... ... *
யிருதுபன்னனையடைந்திவையாவையுமியம்ப ... ... *
மருமலர்க்குழன்மன்றல்கேட்டலுமுளமகிழ்வுற் ... *
றுருவவாம்பரித்தேர்விடுவாகுவற்குரைப்பான் ... ... *

(இ-ள்) சுருதிநூல் - வேதசாஸ்திரங்களினது — துறை - மார்க்கத்தில் — போயவன் - சிறந்தவனாகியவேதியன் — துனைவினில் - சீக்கிரத்தில் — எய்தி - (அயோத்தியை) அடைந்து — இருதுபன்னனை - இருதுபன்னமஹாராஜனை — அடைந்து - நெருங்கி — இவையாவையும் - இவையனைத்தையும் — இயம்ப - சொல்ல — மருமலர் - வாசனைபொருந்திய மலரையணிந்த — குழல் - கூந்தலையுடைய தமயந்தியினது — மன்றல் - விவாகவார்த்தையானது — கேட்டலும் - கேள்வியுற்றமாத்திரத்தில் — உளம் - மனமானது — மகிழ்வுற்று - களிப்புற்று — உருவவாம் - நேராகத்தாவாநின்ற — பரி - குதிரைகட்டிய — தேர்விடும் - தேரைச்செலுத்தாநின்ற — வாகுவற்கு - பாகுகனென்னுஞ் சாரதிக்கு — உரைப்பான் - சொல்லுவான் — (எ-று) (கருத்து) இருதுபன்னன் தேர்ப்பாகனுக்குச்சொல்லுவான் என்பதாம், (௪)

தளருநுண்ணிடைத்தமயந்திசுயம்வரம்நாளை ......... *
யுளைவயப்பசும்புரவியிலுள்ளமோர்ந்தனையேற் ... *
றெளியுங்கேள்வியாய்விரைவினிற்செலுத்துகதேரென்,
றளிமுரன்றுபைந்தேனுகர்தாரினானறைந்தான் ...... *

(இ-ள்) தளரும்-தளர்ச்சியடையாநின்ற—நுண்ணிடை-நுட்பமான இடையையுடைய—தமயந்தி-தமயந்தியினது—சுயம்வரம்-சுயம்வரமானது—நாளை-நாளையதினத்தில் (நடக்கின்றது)—உளை-புறமயிரினையும்—வயம்-வெற்றியையுமுடைய—பசும்-பசுமையாகிய—புரவியின்-குதிரையினது—உளம்-மனதை—ஓர்ந்தனையேல்-அறிவாயானால்—தெளியுங்கேள்வியாய்-தெளிவுபெறுங்கேள்வியையுடையபாகுகனே—விரைவினில்-சீக்கிரத்தில்—தேர்-இரதத்தை—செலுத்துக-நடத்துக—என்று-என்றுசொல்லி—அளி-வண்டுகள்—முரன்று-சத்தித்து—பைந்தேன்-பசியதேனை—நுகர்-உண்ணும்படியான—தாரினான்-மாலையணிந்த இருதுபன்னமஹாராஜன்—அறைந்தான்-சொன்னான்-(எ-று) (கருத்து) இருதுபன்னன்தேர்ப்பாகனை நாளை தமயந்திக்குச்சுயம்வரஞ்சீக்கிரந்தேரைச்செலுத்தென்றான் ()

கேட்டவாகுவன்கிளியெனமிழற்றுதீங்கிளவி ......... *
காட்டுணீத்தது நினைத்தனளாயினுங்கற்பு ............ *
நாட்டுகின்றவளித்திறம்புரியுமோநம்மை ............ *
கூட்டுதற்கிஃதிழைத்தனளாமெனக்குறித்தான் ...... *

(இ-ள்) கேட்ட-அச்சொல்லைக்கேட்ட—வாகுவன்-வாகுவனென்னும்பெயரினையுடைய நளன்—கிளியென-கிளிபோல—மிழற்று-சொல்லப்பட்ட—தீங்கிளவி-மதுரமானசொற்களையுடைய தமயந்தியானவள்—காட்டுள்-காட்டினுள்—நீத்தது-விடுத்ததை—நினைத்தனளாயினும்-(விரோதமாக) நினைத்தாளானாலும்—கற்பு-பதிவிரத்தியத்தை—நாட்டுகின்றவள்-நிலைநிறுத்துகின்ற அவள்—இத்திறம்-இவ்வண்ணமாக—புரியுமோ-செய்வாளோ (செய்யாள்—ஆயினும்) நம்மை-எம்மை—கூட்டுதற்கு-(தன்னுடன்) கூட்டுதற்கு—இஃதிழைத்தனளாம்-இதைச்செய்தவளாவாள்—என-என்று—குறித்தான்-கருதினான்—(எ-று) (கருத்து) நளன் தன்னைவரவழைக்க இவ்வாறுசெய்தாளென்று நினைத்தான்-எ-ம். (௫)

நொறில்வயப்பரித்தேர்பண்ணிநொடியினிற்கொணரா,
வெறுழ்வலித்தடந்தோளினாய்தேர்மிசையிவரி ...... *
னறுமலர்ப்பசும்பூந்தொடைவிதர்ப்பர்கோனாட்டி *
லுறுவலிப்பகல்கழிவதன்முன்னெனவுரைத்தான் ... *

(இ-ள்) நொறில்-வேகமும்—வயம்-வெற்றியும்பொருந்திய—பரி-குதிரைகட்டிய—தேர்-இரதத்தை—பண்ணி-அலங்கரித்து—நொய்தினில்-சீக்கிரத்தில்—கொணரா-(வாகுவன்) கொண்டுவந்து—எறுழ்வலி-மிகுந்தவலிமைபொருந்திய—தடந்தோளினும்-பருத்ததோட்களையுடைய இருதுபன்னவரசனே—தேர்மிசை-தேரினில்—இவரில்-ஏறிக்கொள்வையாகில்—நறுமலர்-வாசனைபொருந்திய மலர்களைத்தொடுத்த—பசும்-குளிர்ந்த—பூந்தொடை-அழகியமாலைகளையணிந்த—விதர்ப்பர்கோன்-வீமராஜனது—நாட்டில்-தேயத்தில்—இப்பகல்-இன்றைபகலினைப்—கழிவதன்முன்-நீங்குவதற்குமுன்னமே—உறுவல்-அடைவேன்—என-என்று—உரைத்தான்-சொன்னான்—(எ-று) (கருத்து) தேர்ப்பாகனாகிய நளன் தேரைக்கொண்டுவந்து அரசனே நீயேறினால் பொழுதுபோமுன் விதர்ப்பதேயத்தில் கொண்டுபோய் விடுவேன்என்றான்-எ-ம், (எ)

என்றுகூறலுமிளங்கதிர்ப்பரிதிபோலிறைவன்...... *
குன்றுபோலுயர்கொடிஞ்சியந்தேர்மிசைக்கொள்ள *
நின்றயாவருவியப்புறநினைவருங்கடுப்பின்......... *
மன்றலந்தொடைவாகுகன்வாம்பரிவிடுத்தான்...... *

(இ-ள்) என்றுகூறலும்-இப்படிச்சொல்லமாத்திரத்தில்—இளங்கதிர்ப்பரிதிபோல்-பாலசூரியன்போல—இறைவன்-இருதுபன்னவரசன்—குன்றுபோல்-மலைபோல—உயர்-உயர்ந்த—கொடிஞ்சி-மேற்பரப்பையுடைய—அந்தேர்மிசை-அழகியதேரினில்—கொள்ள-ஏறிக்கொள்ள—நின்றயாவரும்-பார்த்திருந்தஅனைவரும்—வியப்புற-ஆச்சரியப்பட—நினைவரும்-எண்ணுதற்கரிய—கடுப்பின்-வேகத்தினால்—மன்றல்-வாசனைபொருந்திய—அந்தொடை-அழகியமாலையணிந்த—வாகுகன்-பாகுகனானவன்—வாம்பரி-தாவாநின்றகுதிரைகளை—விடுத்தான்-நடத்தினான்—(எ-று) (கருத்து) இருதுபன்னன் தேரிலேற நளனாகியபாகன் தேரைவிடுத்தான்-எ-ம், (அ)

விடுத்தவாம்பரிவருந்தலுமெய்த்தவர்தனக்குத்...... *
கொடுத்தவிஞ்சையைக்கொய்யுளைப்பரியொடுங்கூறக் *
கடுப்பையாவருமுணர்ந்திலர்கால்விசைத்தோடி ... *
யடுத்தவார்கழல்விதர்ப்பர்கோனணிசெழுநாட்டில்... *

(இ-ள்) விடுத்த-செலுத்தப்பட்ட—வாம்பரி-தாவாநின்றகுதிரைகள்—வருந்தலும்-வருந்துமளவில்—மெய்த்தவர்-முனிவர்கள்—தனக்குக்கொடுத்த-தனக்குபதேசித்த—விஞ்சையை-மந்திரத்தை—கொய்-கொய்துகட்டிய—உளை-புறமயிரினையுடைய—பரியொடும்-குதிரையோடு—கூற-உபதேசிக்க—கடுப்பை-(நடந்த)வேகத்தை

—யாவரும்-எவரும்—உணர்ந்திலர்-அறிந்திலர்—(ஆம்படி)கால்விசைத்து-கால்களைவீசி—ஓடி-சென்று—வார்கழல்-நீண்டவீரக்கழலையணிந்த-விதர்ப்பர்கோன்-வீமராஜனது—அணிகெழும்-அழகுபொருந்திய—நாட்டில்-தேயத்தில்--அடுத்த சேர்ந்தான்—(எ-று) (கருத்து) குதிரைகள்விதர்ப்பதேயத்தைச்சார்ந்தன-எ-ம், (௯)

கூந்தன்மாவுள்ளமறிதலிற்சாலிகோத்திரனோ... ... ...*
வாய்ந்தகேள்வியின் மாதலியோவன்றிநளனோ... ......*
மேந்தல்வேற்றுருவெடுத்தனனோவெனவெண்ணி ...*
வேந்தர்வேந்தனுமணிமுடிதுளக்கினன்வியந்தான் ..*

(இ-ள்) கூந்தன்மா-புறமயிரையுடையகுதிரைகளினது—உளம்-மனதை—அறிதலில்-உணர்வதில்—சாலிகோத்திரனோ-சாலிகோத்திரமுனிவனோ--(அன்றி) வாய்ந்தகேள்வியின்-பொருந்தியகேள்வியையுடைய—மாதலியோ-இந்திரசாரதியோ-அன்றி-அல்லவாகின்—நளனும்-நளமஹாராஜனாகிய—ஏந்தல்-அரசன்—வேற்றுருவெடுத்தனனோ-வேறுருவெடுத்துவந்தவனோ—எனவெண்ணி-என்றுசிந்தித்து—வேந்தர்வேந்தனும் - இருதுபன்னராஜனும்—மணிமுடி-நவரத்தினகிரீடந்தரித்தசிரத்தை—துளக்கினன்-அசைத்தவனாய—வியந்தான்-சந்தோஷித்தான்(எ-று)(கருத்து)இருதுபன்னன்சாலிகோத்திரனோஇந்திரசாரதியோநளனோவென்றெண்ணியதிசயித்தான் -எ-ம்,

முத்தவெண்குடைவேந்தர்கோன்முழவுறழ்தடந்தோ *
ளுத்தரீயமந்நெறியிடைவீழ்தலுமுணர்ந்து.........*
தத்துவாம்பரிநிறுவியத்துகிறருகென்னப்..........*
பத்தியோசனைகடந்ததும்தெனப்பகர்ந்தான்........*

(இ-ள்) முத்தவெண்குடை - முத்தினாற்செய்தவெள்ளைக்குடையைத்தரித்த—வேந்தர்கோன் - இருதுபன்னவரசனுடைய—முழவுறழ்-மத்தளத்தையொத்த— தடந்தோள் - பருத்ததன்தோள்களினின்றும்—உத்தரீகம்-அங்கவஸ்திரமானது—அந்நெறியிடை - அந்தமார்க்கத்தில—வீழ்தலும்-விழுந்தமாத்திரத்தில்—உணர்ந்து-தெரிந்துகொண்டு—தத்துவாம் - தாவியோடுகின்ற—பரி-குதிரைகளை—நிறுவி-நின்று—அற்றுகில் - அந்தஅங்கவஸ்திரத்தை— தருகென்னா-தாவென்றுகேட்க—தேர் - இரதமானது—பத்தியோசனை - பத்தியோசனைதூரம்—கடந்தது-கடந்துவந்தது—என -என்று—பகர்ந்தான்- (பாகுகன்) சொன்னான்—(எ-று) (கருத்து) இருதுபன்னன் அங்கவஸ்திரம் விழுந்தது எடுவெனசாரதி பத்துயோசனைசென்றதுஎன்றான்-எ-ம், (௰௧)

இன்னவாய்மைகேட்டரசனும்வியப்புடனேகப் ... ...*
பின்னுமையிருகாவதமகன்றதற்பின்னர் ... .........*
முன்னர்த்தோன்றியதளியினம்பெடையொடுமூசப் *
பொன்னந்தாதுகுபூந்துணர்ப்பொரியமாத்தான்றி ...*

(இ-ள்) இன்னவாய்மை - இத்தன்மையானவசனத்தை — கேட்டு-கேள்வியுற்று — அரசனும் - இருதுபன்னவரசனும் — வியப்புடன்-ஆச்சரியத்துடனே — ஏக-போக — பின்னும்-பின்பும் — ஐயிருகாவதம்-பத்துக்காவதவழி — அகன்றதற்பின்னர்-சென்றபின்பு --- அளியினம்-வண்டுக்கூட்டங்கள் — பெடையொடும் - பெட்டைவண்டுகளுடனே — மூச-மொய்க்கப்பெற்ற — பொன்னம்- பொன்போலழகிய — தாது-மகரந்தப்பொடிகள் — உகும்-உதிரப்பெற்ற--பூந்துணர்-புஷ்பக்கொத்துக்களையும்--பொரியமா-பெருக்கெடுத்தஅடியையுமுடைய — தான்றி தான்றிமரமானது--முன்னர்-எதிரில் — தோன்றியது-காணப்பட்டது.,(எ-று) (கருத்து) தான்றிமரம் எதிரில்காணப்பட்டது,

தான்றிமாமரந்தோன்றலுந்தேரினைத்தகைத்துத் ... ...*
தோன்றுமிம்மரத்திலைகளுந்தொக்கமென்பழனு ... *
மூன்றுகோடியேமுப்பதிற்றிரண்டெனமொழிய ... *
வான்றகேள்வியோனெண்ணியற்றுமெனவியந்தான்...*

(இ-ள்) தான்றிமாமரம்-பெரியதான்றிமரமானது — தோன்றலும் -காணப்பட்டவளவில் — தேரினை-இரதத்தை — தகைத்து-இருதுபன்னவரசனிறுத்தி — தோன்றும்-காணப்படுகின்ற — இம்மரத்து- இந்தமரத்தில் — இலைகளும்- இலைகளும் — தொக்கமென்பழனும்-நெருங்கியமென்மையானபழங்களும்-- மூன்றுகோடியே-முப்பதிற்றிரண்டென,இரண்டுதலையிட்டமுப்பதைமேற்கொண்ட மூன்றுகோடியென — மொழிய-சொல்ல — ஆன்றகேள்வியோன்- நிறைந்தகல்வியையுடைய நளமஹாராஜன் — எண்ணி- அம்மரத்திலிலைமுதலியவற்றைக் கணக்கிட்டு — அற்றும்-நீசொல்லுமத்தன்மைத்தாம் — என-என்றுகூறி — வியந்தான்-(அக்கணக்கறிவினிலாச்சரியப்பட்டான் — (எ-று) (கருத்து) இருதுபன்னன் தான்றிமரத்திலைகளுங்கனிகளு ஆறுகோடிய றுபத்துநாலுமெனச்சொல்ல சாரதியெண்ணியதிசயித்தான்-எ-ம்,()

இனையவிஞ்சைமற்றெனக்குநீயளித்தனையென்னிற் ...*
றனைவயப்பரியுளமுணர்விஞ்சையான்சொல்வன் ... *
வனைபொலன்கழன்மணிமுடிமன்னவென்றுரைப்ப ...*
வனையவிஞ்சையைவாகுகற்களித்தனனன்றே ...... ...*

(இ-ள்) இனையவிஞ்சை-இத்தன்மையாகியவித்தையை—எனக்கு-என்றனுக்கு — நீயளித்தனையெனில் - நீகொடுப்பாயானால் — துனை-வேகம்பொருந்திய—மயம்-வெற்றியுடைய—பரி-குதிரைகளின்—உளம்-மனதை—உணர்விஞ்சை-அறியும்வித்தையை— வனை-கட்டப்பட்ட—பொலங்கழல்-பொன்னாற்செய்தவீரக்கழலையும்—மணிமுடி-நவரத்தினம்பதித்தகிரீடத்தையுந்தரித்த—மன்ன-இருதுபன்னவரசனே—யான்-நான் — சொல்வன் - உனக்குச்) சொல்வேன்—என்றுரைப்ப - என்றுவாகுவன்சொல்ல — அனையவிஞ்சையை-அந்தவித்தையை— வாகுகற்கு - பாகுகனுக்கு — அளித்தனன்-(இருதுபன்னவரசன்)கொடுத்தான்--(எ-று) அந்தவித்தையாவது-கணக்குவித்தை-அதுவேஅக்ஷவித்தையாம்-(கருத்து) சாரதி இந்தவித்தையை எனக்குக்கொடுக்குதிரைகளுளத்தையறியும்வித்தையை உனக்குக்கொடுப்பேனென்றான் இருதுபன்னன்சாரதிக்குகொடுத்தான் -எ-ம்,

இருதுபன்னனவ்விஞ்சையைவாகுகற்கீய....... .......*
மருவிநின்றவன்கலிதணந்தேகிவாளரவி...... .. .....*
னெரிசெய்வெவ்விடங்கான்றலினிதயநெக்குருகி.......*
வெருவிவாய்விடாவிடத்தினையுமிழ்ந்தனனன்றே......*

(இ-ள்) இருதுபன்னன்-இருதுபன்னவரசன்—அவ்விஞ்சையை-அக்கணக்குவித்தையை—வாகுகற்கு-வாகுகனாகியநளனுக்கு—ஈய-கொடுக்க—மருவிநின்ற-(நளனை)மருவியிருந்த—வன்கலி-வலிமையுள்ளகலியனானவன்—தணந்தேகி-(நளமஹாராஜனை) விட்டுநீங்கிப்போய் —வாளரவு - ஒளிபொருந்தியகார்க்கோடகநாகமானது—எரிசெய்-தகிக்கானின்ற—வெவ்விடம் - கொடியவிடத்தை—கான்றலில் (தானிருந்துபரவினதிற்) கக்கினமையால்— இதயம் - மனமானது—நெக்குருகி-கரைந்துருகப்பெற்று—வெருவி-பயந்து—வாய்விடா-வாய்விட்டு—விடத்தினை - (கார்க்கோடகனது) விஷத்தை— உமிழ்ந்தனன்-கக்கினான் —(எ-று) அன்று-ஏ-அசைகள்- (கருத்து) இருதுபன்னன்வித்தையைப்பாகுகனுக்குக்கொடுக்க- கலிநளனைவிட்டுநீங்கிவிஷத்தைக்கக்கினான்-எ-ம், இன்-சாரியை, (௰௫)

தணந்தவெந்திறற்கலியனைச்சபிக்குவனென்னுக்.......*
கணங்கொள்வண்டிமிர்தாரினனுளத்திடைக்கருத ....*
லுணர்ந்தவெங்கலிதமயந்தியுனாத்தசாபத்தா...... ...*
லணங்கராவுமிழ்விடத்தினாலின்றளவயர்ந்தேன்!......*

(இ-ள்) தணந்த- தன்னைப்பிரிந்துநின்ற—வெந்திறல் - வெவ்வியபலத்தையுடைய—கலியனை-கலிபுருஷனை—சபிக்குவனென்று-சபிப்பேனென்று—கணங்கொள்-கூட்டங்கொண்ட—வண்டு-வண்டுகள்

—உயிர்-சத்தியாதின்ற— தாரினன் - மாலையணிந்தநளமஹாராஜன் —உளத்திடை-மனத்தினில்—கருதல்-நினைத்தலை—உணர்ந்த - அறிந்த—வெங்கலி-கொடியகலியனானவன்— தமயந்தியுரைத்த-தமயந்தி கொடுத்த—சாபத்தால்-சாபத்தினால் — அணங்கு-அச்சத்தைத்தருகின்ற—அரா-கார்க்கோடகநாகமானது—உமிழ்-உமிழ்ந்த —விடத்தினால்- விஷத்தால்—இன்றளவு - இன்றையமட்டும்—அயர்ந்தேன்-சோர்வையடைந்தேன்—(எ-று) (கருத்து) தன்னைச்சபிக்கநினைந்த நளன்கருத்தையறிந்தசனிதமயந்திசாபத்தால்நாகம் உமிழ்ந்தவிஷத்தால்சோர்வையடைந்தேன்- [இதுமுதலிரண்டுங்குளகம்] எ-ம்.

இழைத்ததீவினை தணந்தனனின்றுதொட்டுன்பேர் ... *
வழுத்தினாரையமருவலன்மன்னனென்றேத்த...... ...*
வழற்கொடுஞ்சினந்தணிந்தனனடல்வேலரசன் ...... *
குழைத்ததான்றியிலேறினன்கொடியவெங்கலியே ... *

(இ-ள்) இழைத்த-செய்யப்பட்ட— தீவினை - கொடுஞ்செய்கைகளை —தணந்தனன்- விட்டுநீக்கினேன்—இன்றுதொட்டு-இன்றையதினமுதற்கொண்டு—உன்பேர்-உன்னுடையநாமத்தை— வழுத்தினாரையும்-துதித்தவரையும்—மருவலன்- சேரேன்—மன்னன்- நளமஹாராஜனை—என்றேத்த- என்றுஸ்துதிக்க—அடல் - போர்செய்கின்ற—வேல்-வேலையேந்திய—அரசன்-நளமஹாராஜனானவன்—அழற்கொடும்- அக்கினியிற்கொடிய—சினம்- கோபத்தை—தணிந்தனன்-விடுத்தான் — குழைத்த-தளிர்த்த—தான்றியில் - தான்றிமரத்தில்—கொடிய-க்ரூரனாகிய—வெங்கலி-வெவ்வியகலியனானவன்—ஏறினான்-ஏறிக்கொண்டான்—(எ-று) வ-அசை-(கருத்து) இன்றுதொடங்கிஉமதுபேரைச்சொன்னவரையும் பிடித்திலேன் என்றுதுதிக்கஅரசன்கோபம்நீங்கினன்சனிதான்றிமரத்திலேறினன்-எ-ம், (௰௭)



கலிநீங்குபடலம் - முற்றிற்று.





# தேவியைக்கண்ணுற்றபடலம்.



இப்படலத்தால் கலிநீங்கியபின்பு நளமஹாராஜன வீமனது
குண்டினநகரத்தில்வந்து மூன்றுவருடம் பிரிவுற்ற
தனது தேவியாகிய தமயந்தியைக்கண்டல்
சொல்லப்படுகின்றது,

(கலித்துறை,)

விண்டமென்மலர்நறவினைவிளரியஞ்சுரும்ப... ... *
ருண்டுதுஞ்சுதார்நிடதர்கோன்றேர்கடிதோட்டி ... *
மண்டுதீம்புனலகழிசூழ்மாமதிற்குடுமிக்... .........*
கொண்டல்கண்படுகுண்டினபுரத்தில்வந்தடைந்தான் *

(இ-ள்) விண்ட-மலர்ந்த—மென்மலர்-மெல்லியபுஷ்பங்களினது—நறவினை-தேனை—விளரி-விளரியென்னும்பண்ணைப்பாடுகின்ற—அஞ்சுரும்பர்-அழகியவண்டுகள்—உண்டு-குடித்து—துஞ்சும்-நித்திரைசெய்யும்படியுள்ள—தார்-மாலையையணிந்த--நிடதர்கோன்-நளமஹாராஜன்—தேர்-இரதத்தை—கடிது-விரைவினில்—ஓட்டி-செலுத்தி—மண்டு-நிறைந்த—தீம்புனல்-மதுரமானநீரையுடைய—அகழி அகழியானது—சூழ்-சூழப்பெற்ற—மாமதில்-பெரியமதில்களுடைய—குடுமி-சிகரத்தில்—கொண்டல்-மேகங்கள்—கண்படு-நித்திரைசெய்யும்படியுள்ள—குண்டினபுரத்தில்-வீமராஜன்பட்டினத்தில்—வந்தடைந்தான்-வந்துசேர்ந்தான்—(எ-று) (கருத்து) நளன்தேரோட்டிக் குண்டினபுரத்தில்வந்தான்-எ-ம், (க)

வில்லியத்தடந்தேர்வருகம்பலைகேளா...... .........*
வொல்லையித்திறந்தேர்விடநளனலாதொருவர் ... ...*
வல்லரோவெனமனத்திடையெண்ணிமற்றனையோ... *
னல்லனேலுயிர்துறப்பனென்றுன்னினளணங்கே ... *

(இ-ள்) வில்லி-வண்டிலையுடைய—அந்தடந்தேர்-அழகியவிசாலமாகியதேரானது—வரும்-வருகின்ற—கம்பலை-சத்தத்தை—கேளா-கேட்டு—ஒல்லை-சீக்கிரத்தில்—இத்திறம்-இவ்வண்ணமாக—தேர்விட-தேரைச்செலுத்த—நளனலாது-நளனையல்லாமல்—ஒருவர்-மற்றொருவர்—வல்லரோ-திறமையுள்ளவரோ—என-என்று—மனத்திடை-மனத்தில்—எண்ணி-சிந்தித்து—அனையோன்-இவன்—அல்லனேல்-நளனல்லனானால்—உயிர்துறப்பல்-உயிரைவிடுவேன்—என்று-என்று—அணங்கு-தமயந்தியானவள்—உன்னினள்-எண்ணினாள்—(எ-று) (கருத்து) தமயந்திதேர்வருஞ் சத்தங்கேட்டு நளனல்லாவிடில் உயிர்விடுவேனென்றாள் எ-ம், (உ)

மருவுபாகனைத்தேரொடும்வாயலினிறுவி……….*
யிருதுபன்னனவ்வீமன்மாட்டேகலுமெதிராப்……*
புரிவயாவையும்புரிந்துபல்காவதம்போக்கி……[ன்
யுருவப்பூணினாய்வந்ததமை யெவன்கொலென்றுரைத்தா

(இ-ள்) மருவுபாகனை-பொருந்தியசாரதியை—தேரொடும்-இரதத்தோடும்— வாயலில்-அரண்மனைவாசலில்—நிறுவி-நிறுத்தி—இருதுபன்னன்-இருதுபன்னவரசனானவன்—அவ்வீமன்மாட்டு- அந்தவீமராஜனிடத்து—ஏகலும்-சென்றவளவில்—எதிராப்புரிவயாவையும்-எதிர்வந்துசெய்யத்தக்கமரியாதையனைத்தையும்—புரிந்து-செய்து—பல்காவதம்போக்கி-பலகாவதவழியைக்கடந்து— உருவப்பூணினாய்-அழகியஆபரணத்தையுடைய இருதுபன்னவரசனே—வந்ததமை-(நீ இவ்விடம்வந்த)தன்மை—எவன்கொல்-என்னகாரணமோ—என்றுஉரைத்தான்-வீமராஜன்சொன்னான்—(எ-று) (கருத்து)இருதுபன்னன் வீமனிடத்திற்சென்றவளவில் வீமனெதிர்வந்து உபசாரஞ்செய்து வந்தகாரியமென்னவென்று கேட்டான்-எ-ம்., (௫)

ஈங்கடைந்ததுமன்னநிற்காணியவெனலும்………*
வீங்குதோளினினியநன்மொழிபலவிளம்பிப் … *
பாங்குளார்தமையுறையுளொன்றமைக்கெனப்பணிப்ப
வாங்குவிண்ணவர்நகரினும்விழுமிதொன்றமைத்தார் *

(இ-ள்) மன்ன-வீமராசனே—ஈங்கு-இந்நகரத்தில்—அடைந்து-வந்தது—நிற்காணிய- உன்னைக்காண்பதற்கு—எனலும்- என்றுசொல்லியமாத்திரத்தில்—வீங்குதோளினான்-பருத்தபுயத்தையுடையவீமராசனானவன்—இனிய- இனிமையான—நன்மொழி - நல்லசொற்களை—பலவிளம்பி-பலவாகச்சொல்லி—பாங்குளார்தமை-அருகிலுள்ளஏவலாளரைப்பார்த்து—உறையுளொன்று-ஒருவிடுதிவீட்டை—அமைக்கென-செய்யுங்களென்று—பணிப்ப-உத்தரவுகொடுப்ப—ஆங்கு-அவ்விடத்தில்—விண்ணவர்நகரினும்-சொர்க்கத்தைக்காட்டிலும்—விழுமிது-மேன்மையதாகிய—ஒன்று- ஒருவிடுதிவீட்டை—அமைத்தார்-ஏவலாளர்திட்டஞ்செய்தார்கள்—(எ-று) (கருத்து) வீமராசனேஉம்மைக்காணவந்தேனென்றவளவில் வீமன்ஏவலாளரைஓர்வீடொன்றமைக்கச்சொன்னான்அவர்களமைத்தார்கள்

இருதுபன்னன்மேவந்தருளினானவ்வயினெய்தி … …*
யரசர்யாவருந்தொக்கிலராய்வினாட்டனைத்தோள்……*
விரைசெய்காதைதன்சுயம்வரமென்னமேதிடன்றுன்,
றுரைசெய்மாற்றமற்றென்கொலென்றயிர்த்தனனுறைந்தான்

(இ-ள்) இருதுபன்னன்-இருதுபன்னவரசன்—வேந்தருவினால்-விமனாத்தரவினால்—அவ்வயின்-அந்தவீட்டில்—எய்தி-அடைந்து—அரசர்யாவரும்- அரசர்களெவரும்—தொக்கிலர்- வந்துசேர்ந்தாரில்லை—ஆய்வளை-சிறந்தவளையலையணிந்த—பணைத்தோள் மூங்கிலையொத்ததோள்களையும்—விரைசெய்-பரிமளிக்கின்ற—கோதைதன்-கூந்தலையுமுடையதமயந்தியினது—சுயம்வரமென்ன-சுயம்வரமென்று—வேதியர்-பருணுதனென்னும்பிராமணன்—முன்-முற்றியதினத்தில்--உரைசெய்-சொல்லப்பட்ட—மாற்றம்-வார்த்தை—என்கொல்-எப்படிப்பட்டதோ—என்று என்று—அயிர்த்தனன்-சந்தேகித்தவனாகி—உறைந்தான்- வாசஞ்செய்தான் — (ஈ-று) மற்று அசை- (கருத்து) இருதுபன்னன்பருணுதனென்னும் பிராமணன் சுயம்வரமென்றுசொன்னதைக்குறித்துச்சந்தேகித்தான்-எ-ம், (௫)

சாந்தமென்முலைத்தமயந்திதோழியைநோக்கிப் ... *
போந்தமன்னவன்பொற்றடந்தேரிடைப்பிணித்த... *
கூந்தன்மாவிடுசாரதிகொற்றவேனளனும்... ... ... *
வேந்தனேயெனவுணர்ந்திவண்வருகெனவிடுத்தாள்...*

(இ-ள்) சாந்தம்-சந்தனக்கோலமணிந்த—மென்முலை-மெல்லியமுலைகளையுடைய—தமயந்தி-தமயந்தியாலவள்—தோழியை-கேசினியென்னுந்தனதுபாங்கியை—நோக்கி- பார்த்து—போந்தமன்னவன்-வந்தவிருதுபன்னவரசனது—பொன்- அழகிய—தடம்- விசாலமாகிய—தேரினில்- இரதத்தில்—பிணித்த- கட்டிய—கூந்தல்மா-புறமயிரினையுடையகுதிரைகளை--விடும்- நடத்துகின்ற—சாரதி-தேர்ப்பாகனானவன்—கொற்றம்-வெற்றிபொருந்திய—வேல்- வேலாயுதந்தரித்த—நளனும்- நளனாகிய—வேந்தனே- அரசனே—(அல்லனோ) என-என்று—உணர்ந்து-அறிந்துகொண்டு—இவண்- இவ்விடத்தில்— வருகென- வாவென்றுசொல்லி—விடுத்தாள்-அனுப்பினாள்—'எ-று) (கருத்து) தமயந்திகேசினியாகியபாங்கியைச்சாரதி நளனேயென்றறிந்து வாவென்றாள்-எ-ம், (௬)

கொங்குவாய்மடுத்தினவண்டுகூட்டுணுங்கூந்தற் ... *
றிங்கள்வாண்முகத்தெரிவைதன்னேவலிற்றிறம்பா... *
மங்கையெய்திமற்றியாவனீயெத்தொழில்வல்லை ...*
யிங்குவந்தவாறென்னெனவாக்குவிசைப்பான் .. ...*

(இ-ள்) கொங்கு-தேனை—வாய்மடுத்து—வாயைவைத்து—இனவண்டு-கூட்டமாகியவண்டுகள்—கூட்டுணும்- கொள்ளைகொண்டுண்ணும்—கூந்தல்-அளகத்தையும்—திங்கள்- சந்திரனைப்போன்றவொளிபொருந்தியமுகத்தையுமுடைய— தெரிவைதன்-வாண்முகம்-ஒளிபொருந்தியமுகத்தையுமுடைய

தமயந்தியினது—ஏவலில்- உத்தரவினின்றும்—திறம்பா- தவறாத—பங்கை-கேசினியானவள்—எய்தி- அவ்விடத்திற்சென்று—யாவனீ-நீயார்—எத்தொழில்-எந்தத்தொழில்களில்—வல்லை- வல்லமையுள்ளவன்—ஈங்கு- இவ்விடத்தில்—வந்தவாறு- வந்ததன்மை—என்னை-எப்படிப்பட்டதென்றுகேட்க—வாகுகன்- வாகுகனென்னப்பட்டநளன்— இசைப்பான்- சொல்லுவான்—(எ-று) (கருத்து) தோழிசென்று நீயாவன் நீ எத்தொழிலில் வல்லவன் நீ இங்குவந்த வகையென்ன எனவாகுவன் சொல்லுவான்- எ-ப, (எ)

விரிமலர்க்குழற்றமயந்திசுயம்வரம்வேட்ட... ......*
விருதுபன்னன்மான்றேர்விடும்வாகுகனென்பேர்...*
புரிவல்வெந்தழலின்றியுமடைத்தொழில்புனலற் ... *
றுருகுபாலையிற்றீம்புனறருவலென்றுரைத்தான் ... *

(இ-ள்) விரி-மலர்ந்த—மலர்-மலர்களையணிந்த—குழல்-கூந்தலையுடைய—தமயந்தி-தமயந்தியினது—சுயன்வரம்- சுயம்வரத்தினில்—வேட்ட-விருப்பமுற்ற—இருதுபன்னன்-இருதுபன்னராசனது—மான்றேர்-குதிரைகட்டியதேரை—விடும்- நடத்துகின்ற—வாகுகன்-பாகுகனென்பது—என்பேர்- என்பெயராம்—வெந்தழல்- வெவ்வியஅக்கினி—இன்றியும்-இல்லாமலும்—மடைத்தொழில்- சமயலை—புரிவல்-செய்வேன்—புனலற்று-நீரில்லாமல்—உருகு-உருகுகின்ற—பாலையில்- பாலைநிலத்தில்—தீம்புனல்- மதுரமானசலத்தை—தருவல்-(உண்டுபண்ணிக்) கொடுப்பேன்—என்றுரைத்தான்- என்றுசொன்னான்—(எ-று) (கருத்து) தமயந்திசுயம்வரத்தை யிச்சித்த இருதுபன்னன் தேர்விடுஞ்சாரதி அக்கினியில்லாமற் சமைப்பேன் நீரில்லாதபாலையில் நீர்உண்டாக்குவேன் என்றான்-எ-ம் (அ)

இன்னவித்தைகணளனலாதறிகுநரில்லை...... ...*
யன்னவன்றரக்கொண்டனைபோலுமவ்வரசன்... ...*
மன்னிவாழ்வதெந்நகர்வயின்வகுத்துரையென்றாள் *
பொன்னவாஞ்சுணங்கரும்பியபுணர்முலைப்பூவை.. *

(இ-ள்) பொன்னவாம் - பொன்போலாகிய— சுணங்கு-தேமல்—அரும்பிய-உண்டாகிய—புணர்முலை- நெருங்கியஸ்தனங்களையுடைய—பூவை-கேசினியானவள்—இன்னவித்தைகள்- இத்தன்மையவித்தைகள்—நளனலாது-நளனல்லாமல்—அறிகுநர்- அறிந்தவர்கள்—இல்லை - (ஒருவரு) மில்லை—அன்னவன் - அந்நளமஹாராசன்—தர-கொடுக்க—கொண்டனைபோலும்-பெற்றுக் கொண்டாய் போலும்—அவ்வரசன் - அந்நளமஹாராஜன் — எந்நகர்வயின்-

